Registered No. M. 1500.

தனிப்பிரதி விலை { உள்நாடு அண 1 / வெளிநாடு ,, 1½ }

# நவசக்தி

## "NAVASAKTHI"


| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர, விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 7 0
சில்லரை விளம்பரம் 1 அங்.0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கரு தாது௵ வைகாசி௴ உ௩ உ (5—6—1936) வெள்ளிக்கிழமை பரல் ௩





# நல்லுரை

இங்கே பொறிக்கப் பெற்றுள்ள இரண்டு முகங்களை நோக்குங்கள். இவ்விரண்டும் யாருடையன? ஒன்று உலகறிந்த ஒருவருடையது; மற்றொன்று ஒரு தமிழ் வீருடையது. இரண்டும் எவ்வோவியர் உள்ளத்தினின்றும் அரும்பி மலர்ந்து உருக்கொண்டன?

திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார் என்பவர் ஓர் ஓவியர். அவர் ஓவியத் துறையில் கைபோய திரு. தை. ஆறுமுக முதலியாரின் புதல்வர்; தமிழ்ப் பெரும் புலவர்; சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூலில் தலைமைத் தமிழாசிரியரா யிருந்தவர். வடமொழியிலும் ஆங்கிலத்திலும் அவர்க்குப் பயிற்சியுண்டு. காவியங்களின் உறவு திரு. முதலியார்க்கு அதிகம்.

திரு. கனகசபாபதி முதலியார் காவியப் பயிற்சி யளவில் நின்றாரில்லை. அவர் ஓவியப் பயிற்சியிலுங் கருத்துச் செலுத்தினர். தந்தையாரிடம் அவர் ஓவியக் கலை பயின்றார். அத்துறையிலும் அவர் வல்லவரானார். இப்பொழுது திரு. முதலியார், சென்னை - பிரம்பூர் பாரக்ஸ் - குயப்பேட்டை - வேங்கடாத்திரி நாயகர் தெரு - 6-வது எண்ணுள்ள இல்லத்தில்-ஓர் ஓவிய நிலையங் கண்டு, உருவச்சிலை அமைக்கும் முயற்சியில் தலைப்பட்டுள்ளார்.

இந் நிலையம் போதரும் பேறு ஒருபோது எனக்குக் கிடைத்தது. அங்கே திரு. கனகசபாபதி முதலியார் வடித்துள்ள உருவச் சிலைகள் காட்சி வழங்கின. முதலில் காந்தியடிகள் திருமுகம் என்நெஞ்சைக் கவர்ந்தது. புத்திரிபாய் ஈன்ற காந்தியடிகள், இச்சாலையில் மோனத்துடன் வீற்றிருக்கிறாரோ என்று கருதுமாறு அடிகளின் ஓவியமுகம் செய்துவிட்டது. ஓவியத்தின் பொலிவு வியக்கத்தக்கதா யிருக்கிறது.

பின்னை, தமிழ் அறிஞரும், சென்னை - கிறிஸ்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், ஆரவாரமின்றிச் சங்கநூல்களைப் போதித்துப் போதித்து நன்மாணக்கரைப் படைத்துப் பெருக்கி வருபவரும், ஓவியர் - கனகசபாபதி முதலியாரின் ஆசிரியரும், எனது கெழுதகை நண்பரும் ஆகிய திரு. எஸ். டி. சற்குணர் பி. ஏ. காட்சி தந்தார். அவர்தம் படிவத்தில் எனதுள்ளம் படிந்தது.

ஓவியத்தில் வல்லுநர் பலருளர். அவருள் ஒருவர் கனகசபாபதி முதலியார் என்று கூறுமளவில் நிற்க என் மனம் எழவில்லை. அவரது காவிய ஞானம் நினைவிற்கு வருகிறது. திரு. முதலியாரது ஓவியம் அவரது காவிய நெஞ்சினின்றும் எழுவது. இந்நுட்பம் அவர் அமைத்துள்ள உருவங்களை நேரே பார்த்து, அவைகளில் ஒன்றுவோர்க்கு இனிது புலனாகும். காவியமற்ற ஓவியம் வெற்றுருவமேயாகும். காவியமும் ஓவியமும் வல்ல ஒருவரிடத்திருந்து பிறக்கும் உருவத்தில், உருவத்தொடு உயிர்ப் பண்புகளும் விராவி அமையும். திரு. முதலியார் ஓவியத்தில் வெற்றுருவம் மட்டும் நிற்கவில்லை. அதனுடன் பண்பாகிய உயிரும் பொலிகிறது. இச்சிறப்பு, திரு. முதலியார் ஓவியத்தில் அமைந்திருத்தல் ஈண்டுக் குறிக்கத்தக்கது.

காந்தியடிகள் பன்னெடுங்காலம் பொறுமையில் உறைந்து உறைந்து நின்றமையால், அவர் தங் கருவி கரணங்களெல்லாம் சாந்த மயமாயின. அவர் சாந்தமேஆயினர்; சாந்தம் அவராயிற்று. அச்சாந்தம் திரு. முதலியார் ஈன்ற காந்தியடிகளது ஓவியத் திருமுகத்தில் திகழ்கிறது.

திரு. சற்குணர் நெஞ்சம் தமிழில் ஊறி ஊறி, அது தமிழ் வீரஞ்செறிந்ததாயிற்று. நெஞ்சம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வடிவமுமாதல் இயல்பு. திரு. சற்குணருடன் நெருங்கிப் பழகினால், தமிழ் வீரம் அவராக உருக்கொண்டது என்பது நனிவிளங்கும். அத்தமிழ்வீரம் திரு. கனகசபாபதிமுதலியார் அமைத்த திரு. சற்குணர் படிவத்தில் நடம்புரிகிறது.

இயல்பும் வடிவும் ஒன்றி முகிழ்க்கும் முறையில் உருவச்சிலை அமைக்கும் திறமை வாய்ந்த இளைஞர் - கனகசபாபதி முதலியார்க்கு எனது வாழ்த்து உரியதாக. அவர்க்கு ஊக்கமூட்ட வேண்டுவது அறிஞர் கடமை.

திரு. வி. க.

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கரு | தாதுஹு வைகாசிமீ ௨௯௳ (5—6—1936), வெள்ளிக்கிழமை | பரல் ௩


## சிலம்பொலி

### சன்மார்க்கமும் உலகியலும்

திரு. வி. க.

சன்மார்க்கத்துக்கும் உலகியலுக்கும் தொடர்பில்லை என்றும், சன்மார்க்கம் வேறு உலகியல் வேறு என்றும், இதுபோழ்து சன்மார்க்கப் பிரசாரம் அநாவசியம் என்றும், உலகியல் பிரசாரமே வேண்டற்பாலது என்றும் சிலர் பேசியும் எழுதியும் வருகிறார். சன்மார்க்கம் உலகியலுக்கு மாறுபட்டதென்பதும், சன்மார்க்கத்தால் உலகியல் ஆக்கம் பெறாதென்பதும், சன்மார்க்கத்துக்குரியார் மிகச் சிலரே என்பதும், உலகியலுக்குரிய பலர் சன்மார்க்கத்தில் தலைப்பட்டால் உலகியல் வளர்ச்சி குன்றித் தேங்கிவிடும் என்பதும் சகோதரர்கள் கருத்துப்போலும்! இக்கருத்துத் தவறுதலுடையது.

* * *

சன்மார்க்கம் என்பது இரண்டுசொற்களால் ஆக்கப்பட்டது. ஒன்று சத்; மற்றொன்று மார்க்கம். இரண்டுஞ் சேரும்போது சன்மார்க்கமாதல் காண்க. சத்-உண்மை; மார்க்கம்-நெறி. உண்மை நெறியே சன்மார்க்கமென்பது. சத் அல்லது உண்மை எது? மாறுதலையின்றி என்றும் ஒரு பெற்றியாயிருப்பது சத் அல்லது உண்மை. இவ்வியல்புடைய சத்தினை உலகம் கடவுள் என்று சொல்கிறது. சத்தினை உலகம் பலமொழியால் பல பெயரால் அழைத்து வருகிறது.

* * *

சத் எங்கே இருக்கிறது? எப்படி இருக்கிறது? இவ்வாராய்ச்சி, சத்மார்க்கம் உலகியலுக்கு மாறுபட்டதன்று என்பதை நனி விளக்கும். விரிந்த ஆராய்ச்சி இங்கே வேண்டுவதில்லை. சுருங்கிய முறையில் சில உரை பகர விரும்புகிறேன். சத்துக்கு இரு வித நிலையுண்டு. ஒன்று அகிலமெல்லாங் கலந்திருப்பது; மற்றொன்று எல்லாவற்றையுங் கடந்து நிற்பது. அகிலமெல்லாம் கலந்து எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் நிலையே ஆராய்ச்சிக்குத் துணைபுரிவது. மற்றொரு நிலை ஆராய்ச்சிக்கு எட்டாதது. அது வாக்கு மனங் கடந்தது.

* * *

சத்தெனுஞ் செம்பொருள் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது. அஃது எவ்வுலகை - எவ்வுலகியலை-விடுத்து வேறுபட்டு நிற்கும்? இது சிந்திக்கற்பாலது. சத்மார்க்கத்தில் நின்று பார்ப்போர்க்கு உண்மை நன்குபுலனாகும். சத், உலகியலுக்கு வேறுபட்டு நிற்பதன்று; உலகியல் சத்தினை விடுத்துத் தனியே நிற்பதுமன்று. "ஒன்று நீயல்லை அன்றியொன்றில்லை" என்று மணிவாசகனாரும், "எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் - அங்கங்கிருப்பது நீ அன்றோ பராபரமே" என்று தாயுமானாரும் அருளியிருத்தலை நோக்குக.

* * *

உலகியலே இயற்கை என்பது. இயற்கையின் காரியமே எல்லாம். இயற்கை, சத்தென்னும் இறையின் உடல். இதனால் உலகியல் உடல் என்பதும், சத் உயிர் என்பதும் விளங்குதல் காண்க. உடல் உயிர்போலுள்ள உலகியலையும் சத்தையும் எப்படிப் பிரித்தல் கூடும்? பிரிவற்றதைப் பிரிவாக நினைப்பது அறியாமை. இவ்வறியாமையே எல்லாத் துன்பங்கட்கும் அடிப்படை. துன்பங்கட்கெல்லாம் அடிப்படையா யிருப்பது அறியாமை என்று உண்மை கண்ட ஆன்றோர் பலர் கூறிப் போந்தனர்.

* * *

உலகியல் வேறு-சத்மார்க்கம் வேறு என்னுங் கூட்டத்தவரால் விளைந்து வருங்கேடுகள் பல. இவர்கள் ஒருவரை ஒருவர் அடக்கியாளலே அறம் என்று கொண்டுள்ளார்கள். இக்கொள்கையினின்றும் ஒரு தேசத்தை மற்றொரு தேசம் அடக்கியாளல் என்பதும் பிறக்கிறது. இதனின்றும் பெரும்பெரும் போர்கள், ஏகாதிபத்திய அமைப்புகள், முதலாளி தொழிலாளி பிரிவு, அடக்குமுறைகள் முதலியன தோன்றுகின்றன இவைகளால் உலகம் படும்பாடு கண்கூடு. இந்நாளில் உலகில் யாண்டாயினும் அமைதி உண்டா? உலகம் இந்நெறியில் நின்று உழலுமாயின், ஆங்காங்கே ஹிட்லர்களும் முஸோலினிகளும் தோன்றுவார்கள். எங்கணும் போராட்டம் நடந்த வண்ணமாயிருக்கும். எங்கும் போராட்டம் எழும்பினால் மக்கள் நிலையென்னாகும்? உலகியலையும் சன்மார்க்கத்தையும் ஒன்று படுத்தலாகாது என்று கூறும் சகோதரர்கள், தற்கால நிலையை ஓர்ந்து பார்ப்பார்களாக.

* * *

சன்மார்க்கத்தில் உலகியல் ஒன்றுமாறு மக்கள் வாழ்வு நடாத்திய காலமுண்டு. அக்காலத்திலேயே நல்ல அரசியலும், நல்ல காவியங்களும் ஓவியங்களும் பிறந்தன. இவைகளால் சகோதர நேயம் பரவி வந்தது. ஏகாதிபத்திய உணர்வே அந்நாளில் அரும்பவில்லை. சன்மார்க்கம் வேறு உலகியல் வேறு என்று எண்ணும் பாழான எண்ணம் மண்பதையில் உதயமான நாள்தொட்டு, உலகில் சகோதர நேயம் அற்றுவிட்டது. ஏகாதிபத்தியப் பித்து ஆங்காங்கே தலைக்கேறலாயிற்று.

* * *

உலகியலை வேறாகவும் சன்மார்க்கத்தை வேறாகவும் பிரித்துக் காட்ட முன்னின்றது ஐரோப்பாவேயாகும். அங்கிருந்து கிளம்பிய பாழான நாகரிகம் மண்பதையில் சன்மார்க்க நினைவையே கல்லிவிட்டது. சன்மார்க்க உணர்வுக்கே கேடு சூழ்ந்த ஐரோப்பிய நாகரிகம், எப்பொழுது தொலையும்? எப்படித் தொலையும்? வழி என்ன? வழி என் போன்றவர்களால் கோல வேண்டுவதில்லை. சத்தாகிய இறையை உயிராக் கொண்டு, உடலாக நின்று கடனாற்றும் இயற்கையே பொருந்திய வழி கோலும். இறை அப்பன் வழி நின்று இயற்கை அன்னை கடனாற்றுவாள். அவள் கோலும் வழியே வழி. அவ்வழி நிற்க உலகம் ஒருப்படுவதாக.

இந்நாளில் எல்லாவற்றிற்கும் வழி காட்டியாயிருப்பது தற்கால ஐரோப்பிய நாகரிகம். இஃது உலகறிந்த தொன்று. ஐரோப்பிய நாகரிகமே யாண்டும் பரவி வருகிறது. அதற்கு மக்கள் பலியாகி வருகிறார்கள். மக்கள் வாழ்வு தற்கால நாகரிக வெம்மையில்-அதாவது நரகில் - வீழ்ந்து நெளிதல் வெள்ளிடைமலை. இந்நிலையில் இயற்கை அன்னை எங்ஙனம் ஐரோப்பாவை நல்வழிப்படுத்துவாள் என்று நேயர்கள் கருதலாம். இயற்கை அன்னை படிப்படியே தன் கடனாற்றுமலிராள்.

* * *

ஐரோப்பாவின் நிலையை உன்னுவோம். ஐரோப்பாவில் ஏகாதிபத்திய ஆசை-ஏறக்குறைய ஒவ்வொரு தேசத்திலும் - புகுந்து புகுந்து திளைக்கிறது. அதற்கு அடிமையாகாததேசமேயில்லை. அவ்வாசையால் ஒவ்வொரு தேசமும் போருக்கென்றே ஆயுதங்களைப் பெருக்கிவருகிறது. விஷப்புகையும் அக்கினித் திராவகமும் ஒவ்வொரு தேசத்திலும் புதிது புதிதாகக் காணப்பட்டு வருகின்றன. கொலைக்கென்று விஞ்ஞானப் புதுமைகள் பல காணப்படுகின்றன. படித்தவர்தொண்டு இவ்வழியில் செல்கிறது. போர் மூண்டால் ஒவ்வொரு தேசத்திலும் விஞ்ஞான வாணி தன்னரசு செலுத்துவள். அவ்வரசு ஐரோப்பாவுக்கு நல்லறிவுச்சுடர் கொளுத்தாமற் போகாது. விஷப்புகைக்கும் அக்கினித் திராவகத்துக்கும் தேசங்கள் இரையாகும்போது மக்கள் மனோநிலை மாறியே தீரும்; அப்பொழுது சன்மார்க்கத்தைப் பற்ற முந்தும். உலகியலை வேறாகவும் சன்மார்க்கத்தை வேறாகவுங் கொண்டு நாகரிகத்தை வளர்த்த தவறுதலை ஐரோப்பிய சகோதரர்கள் உணர்வார்கள். அவர்கள் உலகியலைச் சன்மார்க்கத்தின் வழி நடாத்த முனைவார்கள். அதனால் உலகம் உய்யும்.

* * *

இறையை உயிராக்கொண்ட இயற்கையின் கூறுகள் பல. அவைகளைத்திரட்டி மண்-புனல் - தீ-காற்று-வான்-திங்கள்-ஞாயிறு - என்று ஒருவகைப்படுத்திக் கூறலாம். இவ்வியற்கைக் கூறுகளெல்லாம் ஒவ்வொரு சாதியார்க்கு - ஒவ்வொரு மதத்தார்க்கு-ஒவ்வொருமொழியார்க்கு-ஒவ்வொரு தேசத்தார்க்கு-ஒவ்வொரு விதமாகவா பயன்பட்டு வருகின்றன? ஒளியும் காற்றும் நீரும் எல்லார்க்கும் சமமாகவல்லவோ பயன்படுகின்றன? இயற்கை அன்னை பொதுவாகவே உயிர்களுக்குத்திருவருள்சொரிந்துவருகிறாள். இதுவே இயற்கைச் சமதர்மம் என்பது. இத்தர்மத்தின்படி உலகம் நடைபெறுதல் வேண்டும். இவ்வாறு உலகம் நடைபெறின், உலகம் முழுவதும் சமதர்ம வாழ்வு பரவும்; பெருகும். சமதர்ம வாழ்வு இயற்கை வாழ்வாகும். இரண்டும் ஒன்றே. இயற்கை, சத்தெனும் இறையின் உடல். சத் - இறை; மார்க்கம் அதன் உடலாகிய இயற்கை. ஆகவே, சத்மார்க்கம் என்பது இயற்கை வழி நிற்பதென்க. இயற்கை வழியாவது சம தர்மம். இங்கே சமதர்மம் எது சன்மார்க்கம் எது என்பதைச் சிந்தித்துப் பார்க்க.

* * *

ஐரோப்பா தேசம் சண்டைக்குத் தன்னைச் சித்தஞ்செய்து வருகிறது. இதைப் பார்க்கிலும் அது தன் தவறுதலை உணர்ந்து, வருந்துவது சிறப்பு; வருந்தி, இயற்கைச் சமதர்மச் சன்மார்க்கத்தில் நின்றொழுக உறுதிகொள்வது நல்லது. மனந்திரும்புதலைக் காணும் இயற்கை அன்னை தண்டனை என்னும் மறக் கருணையை அனுக்கிரகம் என்னும் அறக் கருணையாக மாற்றுவாள். ஐரோப்பா தனது நிலையைச் சீர்தூக்கிப் பார்த்தல் வேண்டும். ஐரோப்பிய வல்லரசுகளெல்லாம் சர்வ தேச சங்கத்தில் நன்மனங் கொண்டு மனந் திரும்பித் தொண்டாற்றினால், போர்களைத் தடுத்துக் கொள்ளலாம். சர்வதேச சங்கம் சமரச சன்மார்க்க சங்கமாக மாறுதல் வேண்டும் என்பது எனது வேட்கை. நேயர்களும் இவ்வேட்கை கொள்வார்களாக.

* * *

சன்மார்க்கம் நேற்று இன்று தோன்றியதன்று. அது தொன்று தொட்டு நிலவி வருவது. அதற்கு ஐரோப்பிய நாகரிகத்தால் இடையூறு நேர்ந்தது. இந்நாளில் சன்மார்க்கம் பிறந்த தேசமாகிய இந்தியா வழி காட்டுதல் வேண்டும். சன்மார்க்க இந்தியாவே ஒருருக்கொண்டு வந்தாலென விளங்கும் மகாத்மாகாந்தி, இதுபோழ்து நிகழ்த்தி வரும் தொண்டுகளெல்லாம் சமதர்ம சன்மார்க்கத்தின்பாற்பட்டனவேயாகும். மகாத்மா காந்தி சமரச சன்மார்க்கத்துடன் உலகியலை ஓம்பி வருவது கவனிக்கத் தக்கது. உலகியல் வேறன்று; சன்மார்க்கம் வேறன்று. உலகியலுக்கு மாறுபட்டது சன்மார்க்கமாகாது. சன்மார்க்க மற்ற உலகியல் சாரமில்லாதது; வறண்டது; உயிரற்றது. அதனால் உலகம் பட்டபாடு போதும்; போதும். உலகம் சத்மயமானது. சத்தை விடுத்து உலகம் நிலவாது. உலகியலும் சன்மார்க்கமும் ஒன்றே. 'உலகன்னை வடிவான தெய்வமே' என்றார் தாயுமானாரும்.

* * *

இப்பொழுது காந்தியடிகள் கிராமத் தொண்டில் தலைப்பட்டிருப்பது நேயர்கட்குத் தெரியும். அதுவே சிறந்த தேசத் தொண்டாகும். விவசாயமும் நெய்தலும் பாரத நாட்டின் உயிர்த் தொழில்கள். இவைகளிரண்டும் பாரத தேவியின் இரண்டு நுரையீரல் என்று ஒருபோது மகாத்மா காந்தி கூறியுள்ளார். அவ்விரண்டும் சுதேசிய முறையில் உயிர்த் தெழுந்தால் பாரத தேவியின் சவலை யொழியும். இப்பொழுது இராஜப்பிரதிநிதியாக வந்துள்ள லார்ட் லின்லிதோ

## சீன - ஜப்பான் பயங்கர யுத்த முழக்கம்

### ருஷிய - சீன உடன்படிக்கை

நாங்கிங் ராணுவ விஷயக் கமிஷன் வைஸ் சேர்மன் மார்ஷல்பெங் என்பவர் 'ருஷிய-சீனநட்பு முடிந்துபோன காரியமென்று டோக்கியோவிலிருந்து அமெரிக்க ஐக்கியநாடுகளுக்கு அனுப்பப்பட்ட தந்திச் செய்திகள் தெரிவிக்கின்றன' என்கிறார். சீனுவையாவது ருஷியாவையாவது ஜப்பான் தாக்கினுல் அந்த இரண்டு தேசங்களும் ஒன்று சேர வேண்டு மென்பது ஒப்பந்தத்தின் சாரமாகும். இச்செய்தியைக் கேட்டதும் ஜப்பானில் பரபரப்பு ஏற்பட்டது.

நாங்கிங்கில் வசிக்கும் ஜப்பானியக் கான்ஸல் ஜனரல் இதைக் கண்டிக்க சீன அரசாங்க அந்நிய இலாகா காரியாலயத்திற்கு ஓடினர். அப்போது அந்நிய இலாகா மந்திரி ஜனரல் ஷங்-ஷுன் இந்தச் செய்தியை மறுத்துக் கூறியதுடன், சோவியத்-மங்கோலிய உடன்படிக்கையைக்கூடத் தாம் கண்டித்து மாஸ்கோவுக்கு எழுதியிருப்பதாகவும் தெரிவித்தார். ஆயினும் ஜப்பானியரது பயம் நீங்கவில்லை. இந்த இரகஸ்ய உடன்படிக்கை உண்மையானுல், சீன தேசிய அரசாங்கத்தார் மத்திய மாகாணங்களில் பொதுவுடைமைக் கட்சியினருடன் செய்யும் போரை நிறுத்திவிடுவார். அப்போது சிறந்த ஆயுதபாணிகளான ஆயிரக்கணக்கான துருப்புகள் வடசீனுவில் ஜப்பானியருடன் யுத்தத்திற்கு வரக்கூடும். மேலும் இராணுவ ஒப்பந்தம் முடிந்ததும் சீன-ருஷிய அரசாங்கங்கள் வர்த்தக உடன்படிக்கையைப் பற்றியும் யோசிக்கலாம் என்ற வதந்தி பரவுகிறது.

#### நெருக்கடி பலம்

பீப்பிங் நகரிலிருந்து வெளியாகும் "இண்டிபெண்டென்ட் கிரிடிக்" பத்திரிகை ஆசிரியரான ஹுஷியூ என்பவர் "மரண வாசலில் சீனு" என்ற தலைப்புடன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். "சீனுவின் 40 கோடி மக்கள் அபிசீனியரைப் பின்பற்றும்படி செய்ய வேண்டாம். இத்தாலியர் அநியாயமாக அபிசீனியரைத் தாக்கியதுபோல நீங்கள் எங்களை அநாதரவாக நிறுத்த வேண்டாம். அப்படி நிறுத்துவீரானுல் அபிசீனியரின் வீரச்செயல் சீனதேசத்திற்கு ஊக்கமளிக்கும்" என்று அவர் ஜப்பானுக்குத் தீவிரமாக எச்சரிக்கை செய்திருக்கிறார்.

சிறிது காலத்திற்கு முன்பு கிழக்கு நாடுகள் ஜப்பான்மீது கொண்டிருந்த மதிப்பையும், ஜப்பானின் ராணுவஸ்தர்களது செய்கையால் அந்த மதிப்பு நிர்மூலமானதையும் குறிப்பிட்டு, அவர் மேலும் எழுதுகிறார்:—

"ஜப்பான் மக்களுக்கு நான் இதைச் சொல்வது, ஜப்பானின் வீழ்ச்சியினுல் சீனுவுக்கோ, உலகிற்கோ, நன்மையுண்டாகும் என்ற நம்பிக்கையால் அல்ல; ஆனுல் இந்த புத்திமதியைச் சொல்லாமலிருக்க என்னுல் முடியவில்லை.

சீனர்களின் பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டு. எதிர்ப்பும், வெறுப்பும் கட்டாயம் வந்தே தீரும்.

அபிசீனியர்களின் வீரத்தைப் பின்பற்றுவதென்பது,சொல்வதுபோலஅவ்வளவு எளிய காரியமல்ல; ஆனுல் ஜப்பானியர்களை எச்சரிக்கை செய்கிறேன். 40லக்ஷம் மக்களும்-நெருக்கடிஏற்படுமானுல் சீனுவின் தொழிற்சாலைகள்-வர்த்தகஸ்தாபனங்கள்-கலைவளர்ச்சி நிலையங்கள்-கல்விச்சாலைகள் முதலிய யாவும் நாசமாக்கப் பட்டாலும் - தரையோடு தரையாக்கப்பட்டாலும் - 20-ம் நூற்றுண்டு யுத்த சாதனங்களால் சாம்பலாகக் குவிக்கப்பட்டாலும்-பொறுமையின் சோதனைக்கு அந்திய காலம் வந்துவிட்டாலும்-கடைசி மனிதன் இறக்கும்வரை எப்படியும் போராடியே தீருவர்."

#### ஜப்பான் பயமுறுத்துகிறது

சந்தேகத்தைத் தெளிய வைத்துக் கொள்ள விரும்பிப் பின் வரும் நிபந்தனைக ளடங்கிய விதிகளுக்குச் சீன அரசாங்கம் கட்டுப்பட வேண்டுமென்று ஜப்பான் கடிதம் அனுப்ப நிச்சயித்திருப்பதாக 'டேய்லிஹெரால்ட்' பத்திரிகையின் அரசியல் நிருபர் தெரிவிக்கிறார்:—

(1) மஞ்சுகோ தனியரசு பெற்ற நாடென ஏற்றுக் கொள்ளல். (2) சீன அரசாங்கம் அந்நிய தேசங்களுடன் செய்யும் சம்பந்தங்களில் ஜப்பான் கலந்துகொள்ளவேண்டும். (3)சீனுவில்-முக்கியமாக ஷான்ஸி மாகாணத்தில் - பொது உடைமைக் கொள்கையினரை அடக்குவதற்கு ஜப்பானிய படை வேண்டுமென்று சீனு கேட்கவேண்டும். (4) பொருள் நிலை யபிவிர்த்தியிலும் பண வரவு செலவுகளிலும் கூட்டுறவை விரும்புவது. (5) சீனுவின் நாணயச் செலாவணிக்கு ஜப்பானிய என் நாணயத்தை அடிப்படையாகக் கொள்ளல். (6) சீன ஆட்சியில் சீர்திருத்தம் செய்ய ஜப்பானிய துணையைச் சேர்த்துக் கொள்ளல்.

மேலும் வட சீனுவில் சுங்க வரி திட்டத்தை நாசம் செய்ய விரும்பி ஜப்பானியர் வர்த்தக சரக்குகளை ரகஸ்ய வழியில் அனுப்ப உடந்தையா யிருக்கிறார். இதனுல் பிரிட்டிஷாரும் அமெரிக்கரும் தம் வர்த்தகம் கேடுறுவதை யறிந்து டோகியோவிலுள்ள தம் ஸ்தானீகர் மூலமாக முறையிட்டபோது ஜப்பானிய அரசாங்கத்தார் இவ்விஷயத்தில் தமக்கு எவ்வித சம்பந்தமு மில்லையெனத் தெரிவித்தாரென்று சொல்லப்படுகிறது.

#### விரோதம் முதிர்கிறது

பீப்பிங்கில் ஒரு ஜப்பானிய அதிகாரியைப் பிரிட்டிஷ் ஸோல்ஜர் கொன்று விட்டதாகக் கூறப்படுகிறது. பிரிட்டிஷ் ஸ்தானீகர் இதை விசாரிக்க வேண்டுமென்று ஜப்பானியர் கேட்கிறார். டீன்ஸ்டினுக்கும் தங்கூவுக்கு மிடையிலுள்ள இரயில்வே பாலத்தை வெடிகுண்டால் தாக்கியது சம்பந்தமாகவும் அதற்குமுன் ஜப்பான் விரும்பியபடி டீன்ஸ்டின் மேயர் ராஜிநாமா செய்ய மறுத்தது சம்பந்தமாகவும் ஜப்பானியர் எதிர்ப்புக் காட்டுகிறார். சுயஆட்சி பெற்ற கிழக்கு ஹோபி மாகாண அதிகாரிகள் ஜப்பானுக்கு விரோதமாக டீன்ஸ்டின் மேயரைத் தாங்குகிறார்கள். மஞ்சூரியாவைப் பிடிக்குமுன் மியூக்டன் சம்பவத்தை ஜப்பான் உபயோகித்தது போல் இப்போதும் இரயில்வே பால சம்பவத்தை உபயோகித்து வடசீனுவுக்குத் தீங்கிழைக்கலா மென்றும் ஷாங்ஹேயில் கருதப்படுகிறது.

#### யுத்த ஆரம்பம்

ஜப்பானுடன் உடனே யுத்தம் தொடங்க வேண்டுமென்று தெற்குச் சீன அதிகாரிகள், மத்திய அரசாங்கத்துக்குத் தெரிவித்திருக்கிறார்களாம். சங்ஷான் சர்வ கலாசாலை அத்தியட்சர் சோலு என்பவர் சிங்கப்பூரில் ராய்ட்டர் பிரதிநிதியைக் கண்டு, "யான் சீனுவின் சார்பாக ஐரோப்பா செல்கிறேன்; ஹிட்லர், முஸோலினி முதலியோரைக் காணப்போகிறேன்; இங்கிலாந்துக்கும் போவேன். சீனுவின் பொருட்டன்றி மனிதவர்க்கத்தின் பொருட்டுச் சீனம் ஜப்பானுடன் யுத்தஞ் செய்தே தீரல் வேண்டும் என்பதை வலியுறுத்துவது எனதுபிரயாணத்தின் நோக்கம்" என்று கூறியுள்ளார். பயங்கரமான யுத்தம் ஆரம்பமாகும் போலும்!

கிராமசேவையில் அநுதாபமுடையவராகக் காட்டிக் கொள்கிறார். "மான்செஸ்டர் கார்டியன்" காந்தியடிகளுக்கும் லார்ட் லின்லிதோவுக்கும் உள்ள ஒருமையுணர்வை வெளியிட்டு, இருவரையுஞ் சேர்ந்து உழைக்குமாறு வேண்டுதல் செய்திருக்கிறது. இவ்வேண்டுதல் நிறைவேற ஆண்டவன் அருள் செய்வானுக.

* * *

சன்மார்க்கக் காந்தி மகாத்மாவுடன் லார்ட் லின்லிதோ கலந்துசேவைசெய்ய இசைந்து வருவரோ? இசைவாராயின் இந்தியாவாயிலாக உலகில் சன்மார்க்க யுகம் பிறத்தல் உறுதி. லார்ட் லின்லிதோ சன்மார்க்கக் குருநாதனைக் கண்டு பேச மனங் கொள்வாரென்று எதிர் பார்க்கிறோம். உலகுக்கு இதுபோழ்து சன்மார்க்க உபதேசந்தேவை. அதைச் செய்து செய்து பண்பட்டவர் மகாத்மா காந்தி. சன்மார்க்கவாழ்வை உயிர்ப்பிப்பதற்கு மகாத்மா காந்தியே தக்கவர். உலகம் சன்மார்க்க மயமாக; எங்கணும் சன்மார்க்கம் ஓங்க.





## சர்வதேச சங்கம் நிலைக்க

### ஒருநல்ல யோசனை

"மேலேகுறிப்பிட்ட ஒவ்வொருவிஷயத்திலும் வழிகாட்டிநடக்கப் பிரிட்டிஷ் ராஜ்யம் சக்திபெற்றது.நமக்குத் தீர்க்க திருஷ்டி இருந்தால் நமது சொந்தப் பயன் வளர்வதற்கே அவ்விதம் நடக்க வேண்டு மென்பதை யறிவோம். இப்போதே அவைகளைநடத்திக்கொண்டால் நமக்கு மதிப்புண்டு; உதாரகுணம் உள்ளவர் என்று பெயர் வரும்; அவசியம் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதென்றும் அதற்காக இணங்கினோம் என்றும் பிறர் நகைக்கமாட்டார்" என்று 'லேபர்'பத்திரிகையில் சார்லஸ்ரோடன் பக்ஸ்டன் ஒரு கட்டுரையின் முடிவில் கூறுகிறார். அக் கட்டுரையில் அவர் சர்வதேச சங்கம் திறமையாக அமைவதற்கு வேண்டிய சில விஷயங்களைக் கூறுகிறார். உலகில் உள்ள காலனிகளை வல்லரசுகள் சமமாகப் பங்கிடுவதில் கவலை செலுத்த வேண்டியதில்லை யென்று இவர் கருதுகிறார். "உலகிலுள்ள மூலப் பொருள்களைத் தொழிற்சாலைகளுடன்கூடிய பலதேசங்களும் நியாயவழியில் பங்கிட்டுக்கொள்ள வேண்டுமென்றும், அப்படிச்செய்யும்போது சுதேசிகளின் நலம் கெடலாகாதென்றும்,1918-ம் ஆண்டு தொழிற் கட்சியினர் வெளியிட்ட கொள்கையை 17 வருஷங்களுக்குப் பிறகு 11-9-35ல் ஸர் சாமுவேல் ஹோர் ஜினீவாவில் வெளியிட்டார்" என்று கூறி மேற்பார்வைத் திட்டத்தைப் (Mandatory System) பற்றிச் சில அரிய யோசனைகளை ஸ்ரீபக்ஸ்டன் தெரிவிக்கிறார். "சர்வதேச சங்கம் சில நிபந்தனைகளை மேற்பார்வை வகிக்கும் வல்லரசுகளுக்கு ஏற்படுத்தவேண்டும். சுதேசிகளின் உரிமைகள் காக்கப்பட வேண்டும். இதற்கேற்ற சாசனமொன்று அமைக்கவேண்டும். பூமி, தொழிலாளர்நிலை, நிலவரி, கல்வி, வெள்ளைக்காரர் குடியேறுதல், சுயராஜ்ய வழியில் சுதேசிகள் முன்னேற்றம் ஆகியவற்றில் கண்டிப்பான விதிகளை ஏற்படுத்த வேண்டும். இவ்வாறு நீதி வழங்குமாறு செய்தால் வல்லரசுகள் காலனிகளைப் பற்றிச் சண்டையிடா. ஐரோப்பிய சமாதானம் நிலைக்கும். சர்வதேச சங்கமும் பலம் பெறும்" என்று குறிப்பிடுகிறார்.

## ஜவஹர் கொழுத்த பணக்காரரா?

### தவறுன எண்ணம்

ஜவஹர்லால் நேரு கொழுத்த பணக்காரர் என்ற எண்ணத்தினுல் 'நீங்கள் ஏன் சொந்தத்தில் ஒரு கார் வாங்கிக் கொள்ளக் கூடாது' என்று பலர் அவருக்குக் கடிதமெழுதினர். மற்றும் பலர் அவரை யாசகம்கேட்டுக் கடிதம் எழுதினர். அக்கடிதங்களில் அநேகம் சென்னையிலிருந்து கிடைத்தவை.

இதைக் குறித்து ஜவஹர் பின் வருமாறு எழுதுகிறார்:—

"எனக்குச் சொந்தத்தில் கார் வைத்துக்கொள்ளத்தக்க சக்தியில்லை.மேலும் எந்தச் சமயத்திலும் அரசாங்கத்தார் அதைப் பறிமுதல் செய்யலாம். தென்னிந்தியாவில் நான் ஏதோ பெரிய பணக்காரன் என்ற எண்ணம் பலமாக இருந்து வருவதாகத் தெரிகிறது. அது மிகவும் தவறுன எண்ணம்."

காம்பே நவாப் பீகத்திற்குச் சொந்தமான சுமார் ரூ. 2500 பெறுமான நகை பம்பாய் அபாலோ பந்தரிலுள்ள ஒரு ஹோட்டலில், களவாடப் பட்டதாகப் போலீசாருக்குத் தகவல் எட்டியது. இவ்விஷயமாகப் போலீசார் ஓர் இந்து 'ஆயா'வைக் கைதுசெய்திருக்கின்றனர்.

## நந்திமலையின் பெருமை

### மகாத்மா வசிக்கும் இடம்

மகாத்மா காந்தி 'நந்திமலை'யில் தங்கியிருக்கிறார். இதனுல் இவ்விடம் மிகப் புகழ் பெற்றதாகிவிட்டது. இது திப்பு இருந்து அரசாண்டவிடம்; கோட்டை கொத்தளங்களுடன் திப்பு குடியிருந்த பிரதேசம். அங்குச்சென்று இடிந்துபோன மதில்களையும், குகைகளையும் பார்த்தால் நம்மையறியாது மெய் சிலிர்க்கும்; உணர்ச்சி ததும்பும்; நமது பண்டைப் பெருமையை நினைந்து நினைந்து மனம் விம்மும்; இதயம் துடிக்கும். இத்தகைய இடங்களையெல்லாம் மைசூர் சிற்பக் கலை ஆராய்ச்சி இலாகா அதிகாரிகள் விளக்கி 1932-ல் விரிவாக ஓர் அறிக்கை தயாரித்தார்கள். அது இப்பொழுது தான் வெளியிடப் பட்டது. அதிலிருந்து சில ரசமான குறிப்புகள் கீழேதரப் படுகின்றன:—அலங்கத்தில் கோட்டை வாசலுக்கு மேலே திப்பு ஒரு சிறிய கட்டிடம் அமைத்திருந்தார். அதில் கோடை காலத்தில் திப்பு வசிப்பது வழக்கம். அவரது சேனை கீழே மலையடிவாரத்திலுள்ள சுல்தான் பேட்டையில் தங்கியிருக்கும்.

வடக்குப் பள்ளத்தாக்கின் மற்றொரு புறத்தில் 700 அடி உயரமுள்ள செங்குத்தான பாறை யொன்றிருக்கிறது. இதற்கு 'ஐதர் பாறை' என்று பெயர். இதனடிவாரத்தில் ஒருகுகை யிருக்கிறது. போரில் பிடிபட்ட ஐரோப்பிய சிப்பாய்களையும் ஏனைய வீரர்களையும் ஐதர் அடைத்து வைப்பது இக் குகையிலேயே.

சுமார் ஓராயிரம் அடி உயரமுள்ள தோர்செங்குத்தான மற்றொரு பாறைக்குத்'திப்புபாறை'யென்றுபெயர். மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களை இப் பாறையின் மீதிருந்து கீழே தள்ளுமாறு திப்பு உத்திரவிடுவதுண்டென்று சொல்லப்படுகிறது. திப்புவுக்குச் சொந்தமாக ஒரு கோஷாஸ்தலம் உண்டு. அது இரண்டு மாடியுள்ள ஒரு கட்டிடம். கோடை காலத்தில் கோஷா ஸ்திரீகள் இங்கே வசிப்பார்கள்.

'அமிர்த ஸரோவரா' என்பது அம் மலைமீதுள்ள பெரிய ஏரி. அதன் படிகளும் மற்றப் பாகங்களும் சலவைக் கற்களால் கட்டப்பட்டவை. இச்சிற்பம் 18-வது நூற்றுண்டு வேலையென்று நம்பப்படுகிறது.

இக்குளத்திற்கு 50 கஜ தூரத்தில் சுண்ணும்பால் கட்டப்பட்ட மேடை யொன்றிருக்கிறது. இதில் இருந்து திப்பு தொழுவது வழக்கம்.

### மரியாதைக் குண்டுகள்

இங்கிலாந்தில் அரசருக்கு 21 மரியாதைக் குண்டுகள் போடப்படுகின்றன. இந்தியாவுக்குச் சக்கிரவர்த்தி யென்ற முறையில் இந்தியாவில் அவருக்கு 101 மரியாதைக் குண்டுகள் உண்டு. ஒவ்வொரு வருஷமும் அரசர் பிறந்த நாளில் இந்தியாவில் 31தடவைபோடப்படும் குண்டுகளால் அவர் மரியாதையடைகிறார். இராஜப்பிரதிநிதியும், அரச குடும்பத்தினரும் 31 குண்டுகள் மரியாதையாகப் பெறுகின்றனர். ஸான்ஸிபார் சுல்தான், இந்திய மகாராஜாக்கள், ஹைதராபாத் நைஜாம் ஆகியோருக்கு மரியாதைக்குண்டுகள் 21. சமஸ்தானங்களுக்கு நியமிக்கப்படும் "பொலிடிகல் ஏஜண்டு"களுக்கு 11 குண்டு.

உலகத்திலேயே மிகப்பெரிய நூல் நிலையங்கள் ரஷ்யாவி லிருக்கின்றன. மாஸ்கோ நகரிலுள்ள லெனின் நூல் நிலையத்தில் அறுபது லட்சம் புத்தகங்களிருக்கின்றன. லெனின் கிராடிலுள்ள பொதுநூல் நிலையத்தில் ஐம்பது லட்சம் புத்தகங்களிருக்கின்றன.

## ஐரோப்பிய நிலைமை

### மீண்டும் 1914

1914-ம் ஆண்டு நேர்ந்த நிலைமை இவ்வாண்டும் நேரும்போல் தோன்றுகிறது. இப்போது ஐரோப்பாவில் 55 லக்ஷம் பேர் ஆயுதந் தாங்கி நிற்கிறார். இன்னும் 70 லக்ஷம்பேர் சித்தமாயிருக்கிறார்.

ஜெர்மனி மேற்றிசையில் தாக்காதிருக்க 1914-ம் ஆண்டு பிரிட்டிஷ், பிரெஞ்சு சேனைத் தலைவர்கள் ஆலோசனை செய்தார்கள். இப்போதும் அத்தகைய ஆலோசனை நடந்து வருகிறது.

1914-ம் ஆண்டு ஜெர்மனிக்குஅஞ்சிப் பிரான்ஸும் ருஷியாவும்உடன்படிக்கை செய்து கொண்டன. இப்பொழுதும் அப்படியே நிகழ்ந்திருக்கிறது.

1914-ம் ஆண்டு ஜெர்மனி, பிரான்ஸ் ருஷியாவுக் கிடையில் சமரசம் பேசுவதாக ஆஸ்திரியா நடித்தது. ரைன்லந்து விஷயமாகப் பிரிட்டன் இப்போது அப்படி நடந்து கொள்கிறது.

1914-ம்ஆண்டு இத்தாலி மதில்மேல் பூனைபோ லிருந்தது. இப்பொழுதும் இத்தாலி அப்படியே இருக்கிறது.

1914-ம் ஆண்டு ஐரோப்பாவில் அளவு கடந்த ஆயுதங்களிருந்தன. இப்போது மேலும் அதிகமான ஆயுதங்கள் ஐரோப்பாவில் செய்யப்படுகின்றன.

லண்டனில் இராணுவ அதிகாரிகள் சம்பாஷணை நடை பெற்றது. இனி ஹிட்லர் என்ன செய்வார்? இதிலிருந்தே போர் நடைபெறுமா பெறுதா என்பது தெரியும்.

—'லிடரரி டைஜெஸ்ட்'

## எதியோப்பிய அரசாங்கம்

### சில இரகஸ்யங்கள்

லண்டனிலுள்ள எதியோப்பிய மந்திரியான டாக்டர் மார்ட்டின் 'டைம்ஸ்' பத்திரிகைக்குச் சில இரகஸ்யங்களைப் பற்றி எழுதுகிறார். சாரம் வருமாறு:—

"தற்கால எதியோப்பியாவின் நிலை விசித்திரமானது. இதற்குமுன் இராஜ்யங்கள் சொல்பமாவது நீதிக்கு மரியாதை செலுத்தி யுத்தம் நடத்தியிருக்கின்றன. எதியோப்பியப் படையெடுப்பில் ஒவ்வொரு காரியமும் தகாததாயிருக்கின்றது. இந்த விபரீதமான நிலையில் தற்காலம் எதியோப்பிய ஜனங்களது அரசாங்கத்தை நடத்துகிறவர்கள் எங்கிருக்கிறார்களென்றும் யாது செய்கிறார்களென்றும் தெரிவிப்பதற்கில்லை. இதைத் தெரிவித்தால் அவர்களிருக்குமிடத்தைச் சுற்றி வெடிகுண்டுகளும் விஷப் புகையும் வந்துவிடும். ஆட்சி நடத்துகிறவர்கள் தெரிவிக்கப் பட்டால், அவர்களைச் சேர்ந்தவர்கள், இதாலியர் வசமகப்படும்போது பெரிய துன்பங்களுக்காளாக நேரிடும்; விசாரணை யின்றிக்கொல்லப்படினும்படலாம். ஆதலால் எதியோப்பிய ஆட்சியினர் தம் சக்கரவர்த்தி மூலமாயன்றி மற்றப்படி தம் மிருப்பை வெளியிடுதல் முடியாது. இவர்கள் மேற்கிலுள்ள நாடுகளைத் தங்கள் வசம் வைத்துக்கொண்டு கிழக்கிலிருந்து சரண் புகுகிறவர்களைக் காப்பாற்றி வருகிறார்கள். இதாலியருக்குத் தங்களால் முடிந்தவரையில் தொல்லை கொடுக்க இவர்கள் தயாரா யிருப்பார்கள்."

## மணித்திரள்

சோவியத் ருஷியாவில் சுமார் 150 பாஷைகள் பேசப்படுகின்றன.

* * *

சீனாவில் நீர் எருமையின் பால் தகர டப்பிகளில் நிரப்பப்பட்டு விற்கப்படுகின்றது.

* * *

ஆப்பிரிக்காவில் காங்கோ சம வெளியிலுள்ள நீகிரோவர்கள் ஒரு வகைப் பாம்புகளை முத்தமிடுகிறார்கள். பாம்புகள் அவர்களைக் கடிப்பதில்லை.

* * *

கானடா தேசத்தின்வடக்குப் பாகங்களில் மிருகங்களும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஆகாய விமான மூலம் ஏற்றிச் செல்லப்படுகின்றன.

* * *

ஒரு பெண்ணின் பாதத்தைப் பார்த்தே அவளது குணத்தை நிர்ணயிப்பது சுலபமென, பிரஞ்சு பாத ரட்சை நிபுணர் ஒருவர் உறுதி கூறுகிறார்.

* * *

கொலம்பஸ் ஓகியோ நகரைச் சேர்ந்த செயின்ட்பால் சர்ச்சில் ஒரு மணி நிறுவப்பட்டது. அதன் நிறை 3½ அந்தர். மணி நிறுவப்பட்ட கொஞ்ச நேரத்தில் திருடர்கள் அதைக் களவாடிச் சென்றார்கள்.

* * *

கண்ணிமைக்குள் கண்ணாடிகளைச் செருகிக் கொள்வதும், கண்விழியோடு கண்ணாடியைப் பொருத்திக் கொள்வதும் அமெரிக்காவில் நவீன முறையில் மூக்குக் கண்ணாடி யணியும் விதங்களாம்.

* * *

ஸ்வீடன் தேசத்தைச் சேர்ந்த ஒரு பெண் ஆகாய விமானத்திற் சென்று கொண்டிருக்கையில் பிரசவித்தாள். குழந்தை பிறந்த இடத்தைப்பற்றி நிச்சயம் தெரிந்த பிறகே ரிஜிஸ்டரில் பதிவு செய்யப்படும் என்று தெரிகிறது.

* * *

அமெரிக்காவில் ஜப்பான் துணிப் போட்டியை ஒழிப்பதற்காக ஜப்பான் துணிகள் மீது நூற்றுக்கு 43½ பங்கு வரி விதிக்கப்பட்டிருக்கிறது. நம் நாட்டில் ஜப்பான் துணிகள்மீது நூற்றுக்கு 50 வீதம் வரி விதிக்கப்பட்டிருக்கிறது.

* * *

அகமத்பூரில், நான்கு வயதான ஒரு பையன், உயிருடன் புதிதாகப் பிடித்த மீன் ஒன்றுடன் விளையாடிக் கொண்டிருக்கையில், அந்த மீன்துள்ளி அவன் வாய் வழியாக வயிற்றுக்குள் சென்று விட்டது. சிறிது நேரத்தில் பையன் இறந்தான்.

* * *

ஆல்பர்டாவைச் சேர்ந்த ஸ்டேவ்லியில் உள்ள பூனைகளுக்கெல்லாம் கழுத்தில் மணிகட்டப் படவேண்டும். மணிகட்டப் படாத பூனையைப் போலீசார் பிடித்து வந்தால் பூனை ஒன்றுக்கு ஒரு ஷில்லிங் வெகுமதியளிக்கப் படும். பூனைகளும் விரட்டப்படும்.

* * *

பிரிட்டனைச் சேர்ந்த கெம்பின் வலியம்ஸ் என்ற கண் வைத்தியரிடம் உள்ள நாய் ஒன்றுக்கு மூக்குக் கண்ணாடியணியப் பட்டிருக்கிறதாம். மூக்குக் கண்ணாடியணியப்படு முன்பு இருந்ததை விட இப்பொழுது அந்தநாயின் பார்வை சக்தி அதிகரித்திருக்கிறதாம். அந்த நாயின் பெயர் புரூஸ்.

* * *

நியூயெர்க்கைச் சேர்ந்த ஏரிகளில் மீன் இல்லாமையால் அந்நகரத்தினர் ஆகாய விமானங்களில் மீனை ஏற்றி வந்து இந்த ஏரிகளில் வீசுகின்றனர். ஆகாய விமானங்களில் மீன்கள் தண்ணீர் இன்றியே உயிருடனிருக்கின்றன. இம்மீன்கள் ஆகாய விமானங்களில் தண்ணீருக்குப் பதிலாகப் பிராண வாயுவினால் காப்பாற்றப்படுகின்றன.

## ஜவஹர் சுற்று யாத்திரை

### மணிமொழிகள்

சர்காலியில் நடந்த ஒரு மகாநாட்டில் பஞ்சாப் மாகாண சமதர்மிகள் ஸ்ரீ ஜவஹர்லால் நேருவுக்கு ருஷியக் கொடியிலடங்கிய சம்மட்டியும் அரிவாளும் பரிசளித்தனர். அப்போது பண்டிதநேரு "ருஷிய முறைகளையெல்லாம் அப்படியே பின்பற்றுதல் கூடாது. நமக்கு ஒரு தேசியக்கொடி ஏற்பட்டிருக்கிறது. அதன் கீழ்நின்று நாம் எல்லோரும் போராடிவருகிறோம்; அதையேமதித்து நாம்தாங்கி நிற்கவேண்டும்" என்று எச்சரிக்கை செய்தார்.

* * *

சென்ற ஞாயிற்றுக்கிழமை அமிர்தசரஸ் நகர சபையும் வக்கீல் சங்கமும் பண்டிதருக்கு உபசாரனை செய்தன. அப்போது பதிலளிக்கையில், அமிருதசரஸில் பிரஜா உரிமைச்சங்கம் ஸ்தாபிப்பதாக வக்கீல் சங்கம்சம்மதித்ததற்குப் பண்டிதர் நன்றி செலுத்தி "தேசஜனங்கள் ஐக்கியப்பட்டுப் பலமாக எதிர்த்து நின்றதன் பயனாக ரௌலட்சட்டம் மாறியதுபோல் புதிய இந்திய அரசியல் சட்டமும் மாறிவிடும்" என்றார்.

* * *

1884-ம் வருஷம் ஏற்பட்ட குஜரான்வாலா நகரசபைக் கமிட்டி இதுவரை அரசாங்க உத்தியோகம் வகியாதவர்களுக்கு உபசாரணைப்பத்திரம் படித்துக் கொடுக்கவில்லை. இப்போது முதன் முதல் பண்டித நேருவுக்கு அக்கமிட்டியார் உபசாரனை செய்தனர். அப்போது பண்டிதர் பின்வரும் கருத்தைத் தெரிவித்தார்:—"நீங்கள் எனக்குச் செய்த மரியாதை என் கொள்கைக்குச் செய்ததாகும். தேசத்திற்குச் சுதந்திரம் வேண்டுமென்ற கொள்கையை நான் பிரசாரம் செய்பவன்."

* * *

குஜரான்வாலாவில் கூடிய பஞ்சாப் அரசியல் மகாநாட்டில் வகுப்புத்தீர்ப்பைப்பற்றிப் பண்டிதநேரு தம்கருத்தைவெளியிட்டார். சுதந்திரத்தையே லட்சியமாக உடைய தாமும் காங்கிரஸும் வகுப்புத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ள முடியாதாயினும் இப்போதுள்ள காங்கிரஸ் தீர்மானத்தைமாற்றுமலே காங்கிரஸ் பலம் பெறுமென்றார்.

* * *

புதிய டில்லியில் பண்டித ஜவஹர்லால் சமதர்மக்கட்சியினரிடமும் காங்கிரஸ் தொண்டர்களிடமும்தனித்தனியே பேசினார். சமதர்மக் கட்சியினரிடம் பண்டிதர் வரப்போகும் யுத்தத்தைப் பற்றிப் பேசியதாகத் தெரிகிறது. தொழிலாளர்களையும் மற்ற ஏழைகளையும் சேர்த்து ஒழுங்குபடுத்திஅவர்களுக்குத் தற்காலம் உள்ளகுறைகளை நீக்குவதன் மூலமாக அவர்களிடம் அரசியலுணர்ச்சியை எழுப்ப வேண்டுமென்று நேரு கூறினார். மேலும் அவர் சமதர்மக் கட்சியினர் தம் கட்சித் திட்டங்களை நிறைவேற்றுவதுமன்றிஏகாதிபத்திய பலத்துடன் எதிர்த்து நிற்கவும் ஒற்றுமைப்பட வேண்டுமென்றாராம்.

* * *

ஜரியன்வாலா, லயால்பூர் என்ற ஸ்தலங்களில் கொடிய உஷ்ணத்தையும் தாங்கிக்கொண்டு ஜனங்கள் மிகக் குதூகலமாகப் பண்டிதரை வரவேற்றார்கள். ஜரியன்வாலாவில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசியபோது "கிராம வாசிகளைக் கடன் சுமை ஆழ்த்திவருகிறது. கடன்கள் பல கொடுக்கமுடியாத நிலையிலேயே இருக்கின்றன. இந்நிலையை ஜனங்களறிந்து ஏதேனும் பரிகாரம் தேடுவது அவசியம்" என்று வற்புறுத்தினர்.

* * *

லயால்பூர் நகரசபையார் அதிகாரிகள் செய்த உத்திரவைமீறிப் பண்டிதருக்கு வரவேற்பளித்தனர். பல வர்த்தகர்கள் கிராமக்கடன் ரத்து விஷயமாகவும் சமதர்ம சம்பந்தமாகவும் கிராமங்களில் பிரசாரம் செய்தால் ஆபத்துஉண்டாகுமென்று எச்சரிக்கை செய்தபோது, ஸ்ரீஜவஹர்லால் "நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் சமதர்மம் வந்தே தீரும்" என்றும், "நான் தனித்து என்ன செய்யமுடியும்; புதிய உணர்ச்சியின் சக்தி பெருகி வருவதை என்னைப்போல் ஆயிரம் பேர் சேர்ந்தாலும் தடுக்க முடியாது" என்றும் தெரிவித்தார். சமதர்மத்தைப்பற்றிய உண்மையறிவு விளங்கினால் எவருக்கும் பயமுண்டாகக்காரணமில்லையென்று விளக்கினார்.

* * *

உஷ்ணம் தாங்காமலிருந்தபடியாலும் நான்கு நாள் பலத்த வேலை செய்தபடியாலும் ஜவஹர் தம் பஞ்சாப் யாத்திரையை நிறுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

## திருக்குறள் மூலமும் உரையும்

காஞ்சிபுரம்: தமிழ் நூற்பதிப்பகத்தார் வெளியிட்ட திருக்குறள் மூலமும் உரையும் நமது பார்வைக்கு வந்தன. திருக்குறள் தமிழ் நூல்களில் ஞாயிறு போன்றது. அது யாண்டும் பரவத் தொண்டு செய்ய வேண்டுவது தமிழ் மக்கள் கடமை. இத்தொண்டில் மும்முறை ஈடுபட்ட காஞ்சித் தமிழ் நூற்பதிப்பகத்தார்க்கு நமது நன்றி உரியதாக. ஒவ்வொரு முறையும் ஐயாயிரம் பிரதிகள் வெளியிடப்பட்டுள்ளன. மூலம் நன்முறையில் அச்சிடப்பட்டிருக்கிறது. உரை எல்லார்க்கும் பயன்படு முறையில் மிக எளியநடையில் எழுதப்பட்டிருக்கிறது. அச்சும் நன்றாயிருக்கிறது. விலையோ எட்டணா. இவ்வளவு குறைந்த விலையில் மூலமும் உரையுங் கூடிய ஒரு நல்ல பதிப்பு வெளிவந்திருப்பது தமிழ் மக்களின் அதிர்ஷ்டம் என்றே கூறலாம். ஒவ்வொரு தமிழரிடத்திலும் இப்பதிப்பு மிளிர்தல் வேண்டும். இந்நன் முயற்சியில் தலைப்பட்டுழைத்துவரும் பதிப்பாசிரியர் திரு. த. குப்புசாமி முதலியாரை வாழ்த்துகிறோம்.

## உலகக் காட்சி

### படிக்கும் இயந்திரம்

மிஸ். காரோலின் ஜேம்ஸன் என்ற பெண்மணி குருடர்களின் சௌகரியத்திற்காகப்படிக்கும் இயந்திரம்ஒன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். இந்த இயந்திரத்திற்கு 'ஆப்டோபோன்' என்று பெயர். இதில் வார்த்தைகள் எல்லாம் பாட்டு மெட்டில் அமைந்திருக்கின்றன.

* * *

### பேசும் புத்தகம்

குருடர்களின் சௌகரியத்திற்காக அமெரிக்க நாட்டில் "பேசும் புத்தகம்" ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அது பார்வைக்கு ஒரு கிராமபோன் ரிகார்டைப் போலவே யிருக்கிறது. ஒவ்வொரு "பேசும் புத்தகமும்" பத்தாயிரம் வார்த்தைகள் கொண்டன; ஐம்பது நிமிஷங்கள் பேசும். சாதாரண கிராமபோன் மிஷனில் இந்த ரிகார்டை வைக்கவேண்டியது தான் நம்வேலை! உடனே அது பேசும்.

* * *

### மிகப் பெரிய 'பெல்டு'

உலகத்திலேயே மிகப் பெரிய 'பெல்டு' இப்பொழுது நியூஜெர்ஸியில் செய்யப்பட்டிருக்கிறது. அதன் நீளம் 1,291 அடி; அகலம் 4 அடி; நிறை 11 டன். 16 பேல் வயற்பஞ்சும் 5000 சதுர அடி ரப்பரும் அதற்குள் வைக்கப்பட்டிருக்கின்றன. சுருட்டியபொழுது அதன் குறுக்களவு 12 அடி! சுண்ணாம்பு அறைக்கும் ஓர் இயந்திரத்திற்கு இந்த 'பெல்டு' உபயோகிக்கப்படும். இந்த 'பெல்'டின் உதவியால் மணிக்கு 1500 டன் சுண்ணாம்பு அறைக்கலாம்.

* * *

### சினிமா உபாத்தியாயர்

இங்கிலாந்தில் பள்ளிச் சிறுவர்கள் சினிமா படக்காட்சிகளின் மூலம் போதிக்கப்படுகிறார்கள். சுமார் 700 பள்ளிக்கூடங்கள் இம்முறையைப் பின்பற்றி நடக்கின்றன. தேசங்களின் இயற்கையமைப்பு, கடற்கரையமைப்பு, மலைப் பிரதேசங்கள், காட்டுப் பிரதேசங்கள், மிருகங்கள், மனிதர்கள், அவர்களின் பழக்க வழக்கங்கள் முதலிய யாவும் படங்களின் மூலம் போதிக்கப்படுகின்றன. இம்முறை வெற்றிகரமாக நடந்தால் உலகமுழுதும் இது கையாளப்படலாம்.

* * *

### அதிசயச் சுவர்

உலகத்திலுள்ள ஒன்பது அதிசயங்களில் சீன தேசத்துச் சுவரும் ஒன்று. 'சின்' என்பவர் சீனாவின் முதல் சக்ரவர்த்தி. இந்தச் சுவரைக் கட்டியவர் அவரே. மங்கோலியா, மஞ்சூரியா முதலிய பிரதேசங்களிலுள்ள காட்டுமிராண்டிகளான ஜனங்களிட மிருந்து சீனாவைப் பாதுகாக்கவே இச்சுவர் கட்டப்பட்டது. இதன்நீளம் 1500 மைல். சமுத்திர மட்டத்திற்கு 5000 அடி உயரத்திலுள்ள மலைகளையும் சிகரங்களையும் இந்தச் சுவர் கடந்து செல்கின்றது. சரித்திரத்திலேயே மிகப் புகழ் வாய்ந்தது இச்சுவர்; மனிதன் மனத்தாலும் நினைக்க முடியாதது; திறமையான 'பகாசுர' வேலை. இந்தச் சுவரில் 22அடி அகலமும் 35 அடி உயரமும் உள்ள கோபுரங்கள் அநேகம் இருக்கின்றன. இந்தச் சுவர் இயந்திர சாதனங்களின்றியே கட்டப்பட்டது.

---

ஆஸ்திரேலியாவில் உள்ள குரங்குகளில் சில சிகரெட் பிடிக்கின்றன. இக்குரங்குகள் சமயம்பார்த்துச் சிகரெட்டையும் நெருப்புப் பெட்டியையும் கடைகளிலிருந்து எடுத்துக் கொண்டு போய் மரங்களில் உட்கார்ந்து புகைவிட ஆரம்பிக்கின்றன. சில சமயங்களில் புகைவிடத் தெரியாமல் திக்குமுக்காடிக் கீழே வீழ்கின்றன.





## எதிரொலி

### இந்திய அமனுல்லாவா?

மாஜி, அரசர் அமனுல்லா போன்றவர் "ஜவகர்லால்நேரு" என்று ஹிந்து மகாசபையின் காரியதரிசி கூறினார். அவர், "இந்திய தேசிய காங்கிரசுக்குத் தலைமைவகித்து, வால்நட்சத்திரம்போல் அரிய காட்சியளிக்கும் பண்டிதர் ஜவஹர்லால் நேருவின் தோற்றம் மாஜி அரசர் அமனுல்லா தோன்றி மறைந்ததை முற்றிலும் ஒத்திருக்கிறது" என்று பல யுக்திவாதங்களால் ருஜுவாக்குகிறார். முடிவில் "ஆதலால் மாஜி அரசர் அமனுல்லாவைப் போல் பண்டித ஜவஹர்லால் நேருவும் பட்டத்தைவிட்டு ஒதுங்கிவிடுவது மிக்க கௌரவமான செயலாகும். ஏனெனில் அவர் எந்த ஜனசமூகத்திற்குத் தொண்டு செய்ய விரும்புகிறாரோ அந்த ஜனசமூகம் அவரை விரும்பவுமில்லை; அவரது கொள்கைகளை அறிந்து கொள்ளவுமில்லை. ஆதலால் அவர்கள் பண்டிதரை எப்படிப் பின்பற்ற முடியும்?" என்கிறார்.

நமது 'அமனுல்லாவு'க்கு, ஹிந்து மகாசபையின் காரியதரிசியின் சொல் ஏறவில்லை. தமது பீடத்தில் பண்டிதர் உறுதியுடன் அமர்ந்து "காங்கிரஸின் மீது என்கொள்கைகளைப் பலவந்தம் செய்ய நான் விரும்பவில்லை; அதன் மூலமாக நமதுசுதந்திரப் போராட்டத்திற்கு இடையூறுகளே ஏற்படும்" என்று தெரிவிக்கிறார்.

—ஸண்டே டைம்ஸ்.

### சங்கம் யாதுசெய்யும்?

சக்தியிழந்து கோற்றுப்போன சர்வதேச சங்கம் இப்போதும் அழியவில்லை; ஜீவனுடனிருக்கிறது. பிரஞ்சு அரசாங்கத்துள் சமதர்மக்கட்சியினர் புகுந்தது சங்கத்திற்குப் புத்துயிரளிக்கும். தைரியத்தையெழுப்ப வல்ல செய்தி தென் அமெரிக்காவிலிருந்து இப்போது வருகிறது. தடைமுறைகளைப் பற்றி யோசிக்கவும், எதியோபியாவை இதாலி தன் ராஜ்யத்தோடு சேர்த்திருப்பது, சங்கச் சீர்திருத்தம் ஆகிய இவற்றைக் கவனிக்கவும் விசேஷக் கூட்டமொன்றைச் சர்வதேசசங்கம் நடத்தவேண்டுமென்று ஆர்ஜன்டைனா கேட்டிருக்கிறது. எதியோபியாவை இதாலி சேர்த்துக் கொண்ட காரியத்தை எதிர்ப்பதில் ஆர்ஜன்டைனாவுடன் லத்தின் தென் அமெரிக்க நாடுகளும் சேருகின்றன. ஆதலால் அவைகள் அதைரியப் படுவதாகச் சொல்லமுடியாது. இதாலிய பாஸிஸ்டு ராஜ்யத்திற்கு எதிரிகள் ஏற்படாமல் தடைசெய்வதற்குச் சினர் முஸோலினி ஸ்துதிபாடுவதும், பயமுறுத்துவதுமாக இருந்து வருகிறார். ஆப்பிரிக்காவினிடம் பற்றில்லா வல்லரசுகளை விட்டு விட்டாலும், பிரிட்டனும் பிரான்சும் பயந்து இணங்குமென்று நம்பமுடியவில்லை. சங்கத்தை அவமதிப்பதே காரியமாகப் பல காரியங்களை இதாலிய சர்வாதிகாரி செய்திருக்க, அவற்றை இவர்கள் மறப்பார்களா? ஜீனீவாவில் கூடப்போகும் கூட்டம் நெருக்கடியிலகப்பட்டது; ஆங்குச் செய்யப்படும் முடிவைப் பொறுத்து சங்கத்தின் நிலையும் நாகரிகத்தின் பிற்கால வாழ்வும் அமையும்."

—ஹிந்து.

---

ஆஸ்திரேலியாவிலுள்ள டாக்டர் கில்மத் என்பவர் உலகத்திலேயே மிகப் பெரிய தேனடை யொன்றைக் கண்டு பிடித்திருக்கிறார். அந்தத் தேனடையின் அகலம் 21 அடி; உயரம் 36 அடிக்கு மேலிருக்கும். இத்தேனடை ஒரு யூகலிப்டஸ் மரத்தின் மீது கட்டப் பட்டிருந்தது. அந்தத் தேனடையின் நிறை சுமார் ஒரு டன்; அதிலிருந்து எடுக்கப் பட்ட தேன் நிறை ஏழாயிரம் பவுண்டு.

# இந்திய தேச தர்மத்தின் அடிப்படை

## தேசியத்தை எப்படி வளர்ப்பது?

### காலத்துக்குரிய உபதேசம்

அரவிந்தரின் அமிர்த வாசகம்

(முன் தொடர்ச்சி)

#### செயற்கை முறைகள்

பகுத்தறிவின் மற்றொரு குணத்தையும் நாம்கவனிக்கவேண்டும். வாழ்க்கைக்குரிய சாதனங்களைத் தன்னிஷ்டப்படி அடக்கியாள அது விரும்பும்போது, லட்சியங்களை நிறைவேற்றிக்கொள்ளஏற்ற கருவிகளாக அவற்றை உருவாக்கவிரும்பும்போது, 'சமூகம் ஜீவசக்தியுடன் வளர்ந்து வரும் தன்மை வாய்ந்தது' என்ற உண்மையை அது மறத்தல் இயல்பு. இஷ்டப்படி மரத்தையும்இரும்பையும் அறிவு செல்லும் வழியில் உருப்பெறச் செய்வதுபோல் சமூக அமைப்பையும் மாற்றிவிடலாமென்று அது கருதிவிடக்கூடும். சமூகநிலையும் உருவமும் அவ்விதமாக்கவல்ல யந்திரங்களல்ல. திறமையுடன் உழைத்து வேலையைச் சீராக்கவல்ல பகுத்தறிவு ஒரு சமூகத்திற்கு ஜீவநாடியாக இருக்கும் சிறுதத்துவங்களையறிய முடியாததாகி வாழ்க்கையைத் தாங்கும் ரகஸ்ய வேர்களையறுத்து விடுகிறது.

இதன் பயன் என்ன? புதிய திட்டங்கள், நிலயங்கள், சட்டங்கள், ஆட்சி முறையாகிய இவற்றிற்குச் செல்வாக்கும் மிதமிஞ்சிய ஆதிக்கமும் பெருகி, ஜனசமூகம் ஜீவசக்தியை இழந்து யந்திரம் போலாகிவிடுகிறது. இதுவே செயற்கை நாடு அல்லது அரசாங்கம். இயற்கையில் வளரவேண்டியவாழ்க்கை நசித்துவிட அவ்வாழ்க்கையின் கருவியாகமாத்திரம் இருக்கவேண்டிய அறிவு அந்தஸ்தானமடைகிறது; சுதந்திரத்துடன் வளர்ந்துவந்த சமூகமென்ற உடலின்கண் இருந்த வாழ்க்கைத் தத்துவமாகிற ஆத்மா இழக்கப்படுகிறது. கலைப் பயிற்சியுடன்கூடிய அறிவு தன் செயற்கைமுறைகளின் பாரத்தால் ஜீவசக்தியுடன் கூடிய ஒருசமூகத்தின் ஆத்ம சம்பந்தமான உள்ளுணர்ச்சியை நாசம் செய்ய வல்லது. ஐரோப்பிய சமூகங்களில் இந்தக்குறை நிரம்பியிருப்பதால் அவைகள் தம் லட்சியம்பூர்த்தியாக முடியாமல் தடைப்பட்டுத் திணறுகின்றன.

#### மூன்றுவதுநிலை

தனிமனிதன் ஆத்மவழியில் முன்னேற்றமடைவது போல் சமூக சமஷ்டி வாழ்க்கையிலும் விரிவுஏற்பட வேண்டும். இதுவேமூன்றுவதுநிலை. ஆதியில் கண்டு கொள்ளப்பட்ட லட்சியங்களை அறிவால் வளர்த்த பிறகு அவற்றை உயர்த்திவிடவேண்டும். இங்கேசமூகதர்மம் தன் முழு சொரூபத்தையு மறிந்து வளர்தற்கேற்ற முறைகளையும் கண்டு கொள்ளும். அப்போது சமூகவாழ்க்கையின்உன்னத லட்சியம்ஆசைகாட்டியோடும் கானல் நீர்போலாகாமல் கைகூடிய பலனாகிவிடும். அந்நிலை எப்போது உண்டாகும்? மனிதன் சமூக சமஷ்டியுடன் ஒன்றாகித் தனிமையைப் போக்கிக் கொள்ள வேண்டும். ஆதியில் உள்ளுணர்ச்சியாகப் பொங்கிய தேவைகளும் அறிவும், அடுத்தபடியாக ஆராய்ந்துபார்க்கும் வன்மை பொருந்திய பகுத்தறிவுடன் கூடிய மனமும் ஆகிய இவைவாழ்க்கையில் ஆதிக்கம்செலுத்துமாறுவிடலாகாது. எப்போதுமேகாருண்யம், ஐக்கியம், இயற்கையில் எழும் சுதந்திர உணர்ச்சி, தான்கண்டுகொண்ட பரமாத்ம சக்தியின் சூட்சும தர்மம் ஆகிய இவைகள் சாதனங்களா யமைய வேண்டும். இந்தப்பாரிலைபற்றிய வாழ்க்கையிலேயே தனி மனிதருக்கும் சமூக வாழ்க்கைக்கும் ஒப்பற்ற சுதந்திரமும் பரிபூர்ணத் தன்மையும் ஏகத்துவமும் சம்பவிக்கும், ஆனால் உலகிலெங்கும் இதற்கேற்ற சாதன நிலை உண்டாகவில்லை. தனி மனிதன் ஆத்ம வழிபற்றி முன்னேறுவதாலும் பொதுவாக ஒரு மததர்ம வழிபற்றிச் சமூகம் நடப்பதாலும் அந்நிலை யுண்டாகாது. ஆத்மதர்மம் பற்றி நடந்தாலன்றி சமூகம் விரிவாகவளர்ச்சி பெறுதென்ற நிச்சயம் மனிதரிடம் ஊன்றவேண்டும்.

#### ஆதி இந்திய சமூகங்கள்

ஆதியில் சிறு இந்திய சமூகங்கள் மற்றவைகளைப்போலவே இயற்கைவழி பற்றி எழுந்தன. மகத்தான சக்தியுடன் தமக்கேற்ற உருப்பெற்று வளர்ந்து தனித்தனி வாழ்க்கைகளையும் அரசியல்ஸ்தாபனங்களையும் அவை நிர்மாணித்துக் கொண்டன. படிப்படியாக இச்சிறு சமூகங்கள் ஒன்றாகக் கலந்து கலைவளர்ச்சியிலும் சமூகவாழ்க்கையிலும் ஒற்றுமையை வளர்த்து வந்தன. இதனால், அரசியல் வடிவம் விரிவடைந்து வந்ததுமன்றிப் பல சமூகங்களுக் குள்ளும் பொது தர்மம் வளர்ந்து ஒரே தேச சமூகம் உருப்பெற்று விளங்கியது. ஆயினும் ஒரு விசேஷ குணத்தை இங்குக்கவனிப்பது பொருத்தம். சிறிய விஷயங்களில் சிறு சமூகங்கள் இஷ்டப்படி தம்உருக்களைக்காப்பதற்கு முழுஉரிமை பெற்றன; அவற்றுள் கண்டிப்பான ஒற்றுமை தேவையில்லை. பொதுவாக ஓர் ஆத்மதர்மமும் ஒரே வாழ்க்கை யுணர்ச்சியும் வளர்ந்தால் பல சில்லரை விஷயங்களில் மாறுபாடிருக்கலாம். அவைகள் கஷ்டங்களையுண்டாக்க மாட்டா; ஒற்றுமைக்குக் குறைவேற்படாது.

பெரிய ராஜ்யங்கள் வளர்ந்தபோது கூட சிற்றரசுகள், ரிபப்ளிக்குகள், சிறு சமூகங்கள் ஆகிய எல்லாம் அழிக்கப்படவில்லை; புதிய அரசியல் சமூக நிர்மாண வேலைகளுக்காக அவை தள்ளப்படவில்லை; கூடிய வரையில் அவற்றுள்ளடங்கிய சக்திகள் கிரகித்துக் கொள்ளப் பட்டன. ஒரு சமூகம் இயற்கையாக வளரும்போது, உபயோகத்திற்குத் தேவையற்ற பழைய அடையாளங்கள் தாமாகவே நீங்கிவிடும்; புதிய நிலைகளுக்கேற்றபடி மாறுபாடடையக் கூடியவை வேற்றுருக்கள் பெற்றுத் தங்கும். இந்திய சமூகவாழ்க்கைக் கேற்ற குணங்களுக்கும் மனோமய ஜீவசக்திக்கும் உதவி செய்யக் கூடிய அம்சங்கள் பொது தர்மத்திற்குள் இடம்பெறும்.

#### அறிவின் பயன்

இந்தஉள்ளுணர்ச்சியாகிய வாழ்க்கையின் ரகஸ்ய தர்மத்தை அறிவுவளர்ந்தபோதும் சமூகம் மதித்து வந்தது. சமூகதர்மம், பொருள்நிலை, அரசியல் துறைக ளடங்கிய தர்மசாஸ்திர அர்த்த சாஸ்திரங்களைப் பற்றிச் சிந்தித்த இந்திய அறிஞர் மனோ கற்பனையாக சமூக லட்சியங்களையும் திட்டங்களையும் செய்ய வில்லையென்பது மாத்திரமல்ல; அவ்விதம் செய்யக் கூடாதென்ற கருத்தையும் பிடிவாதமாகக் கொண்டார்கள். மேலும் அவர்கள் செய்த காரியங்கள் எவை? சமூகமனமும், வாழ்க்கைச் சக்தியும் முன்பே நிர்மாணித்துக் கொண்ட வழிகளையும் நிலயங்களையும் அநுபவ அறிவைக் கொண்டு அறிந்து ஒழுங்குபடுத்த முயன்றார்கள்; பழைய சாதனங்களை உடைத்தெறியாமல் புதிய வளர்ச்சிகளை ஸ்தாபித்து அவற்றுடன் முன்பிருந்த சக்திகளையும் சமரசப்படுத்தி வந்தார்கள்; அழிக்க வல்ல புரட்சிக் கொள்கைகளைப் புகுத்த விரும்பாமல் புதுப்புது லட்சியங்களையும் மேலே மூப்பி வந்தார்கள். (தொடரும்)

## உதிர்ந்த மலர்கள்

"இந்தியாவையும் மற்றத்தேசங்களையும் நாம் வைத்துக் கொள்ளச் செய்யும் போராட்டமே யுத்தத்திற்கு அந்தரங்க காரணமாகிறது. மற்றத்தேசங்கள் ஏகாதிபத்தியத்திற்காகப்போட்டிபோடுகிற இந்நாள், இன்னம் சில ஆண்டுகளுக்குள் மற்றோர் ஐரோப்பிய யுத்தத்திற்குக் காரணமாகவும் கூடும். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆசையைப் போக்கிச், சுரண்டும் கொள்கையற்றவரிடம் நமது நிர்வாகத்தை ஒப்புவியாவிட்டால் இனி எதிர்காலத்தில் வரவரப் பெருகிவரும் தொல்லைகளிலேயே நாம் அகப்பட்டுக் கொள்ளவரும். 1914-18 நிலைமையை மீண்டும் காண நேரும்."

—ஸர். ஸ்டாப்போர்டு கிரிப்ஸ்

* * *

"தேசத்திற்குள் துக்கத்தையும் வெளியுலகில் யுத்தத்தையும்உண்டாக்கி வருவது தற்காலப்பொருள்நிலை. இதையெதிர்த்து நன்மையுண்டாக்கும் வழியில் கிறிஸ்துவமதம் ஒழுங்காக வேலை செய்யவேயில்லை. இந்தநிலையை ஆமோதித்து கிறிஸ்துவமத நிலயங்களே சொத்துக்களையும் தொழிற்சாலைகளையும் சொந்தமாகவைத்துக்கொண்டு ஜன சமூகத்தினிடம் துக்கம் வளரும்படி செய்து, பிறகுதர்மம்செய்கின்றன. சமூகத் தொண்டு செய்ய இவர்களுக்குப் பணம்வேண்டுமென்று கிறிஸ்துயசிக்க மாட்டார். அவர் மனமாறுதல் வேண்டுமென்றே பிரசாரம் செய்வார்; சொத்தைவிட ஜீவன் மேலானதென்று போதிப்பார்; அடிப்படையான இந்த ஜீவகாருண்ய நீதிக்கு இடையூறுசெய்ய வல்ல சட்டங்களை யெல்லாம் ஒழித்து விடவேண்டு மென்பார்.

—ஸர். ஸ்டாப்போர்டு கிரிப்ஸ்

* * *

"தேசியம் என்பது தேச பக்தியினால் தோன்றும் 'நமது கடமை' யென்னும் பரம தருமமான ஆத்ம லட்சியமாகும். இத்தகையதேசபக்தியும் ஆத்மலட்சியமும் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் மிகமிக அத்தியாவசியமென்பதை நான் வற்புறுத்த விரும்புகிறேன். மேலும் தேசபக்தியும், சமூகப்பற்றும் பொதுஜன ஊழியமும் செய்யாத முஸ்லிம், உண்மை முஸ்லீம் அல்லவென்று நான் ஆதாரங்களுடன் அழுத்தமாய்க் கூறுவேன். தேசபக்தியும் பொதுஜன சேவையும் முஸ்லிம்களுக்குரிய இஸ்லாத்தின் கடமைகளி லுள்ளனவாகும். "ஹுப்புல்வதனி மினல்ஈமான்" "சுதேசாபிமானம் (ஈமானின்) நம்பிக்கையின் இலக்ஷியமாகும்" என்பது நபி நாயகம் (ஸல்) அவர்களது அமுதத் திரு உபதேசமாகும். மேலும், முகம்மதுநபி (ஸல்) அவர்கள், தங்கள் புனித வாழ்நாள் அனைத்தையும் சுதேச பக்தியிலும், பொதுஜன சேவையிலும், ஆத்ம லட்சியத்திலுமே கழித்துத் திகழ்ந்தார்களென்பதை, முகமது நபியவர்களின் புனித சரிதையினால் நன்கறிந்திருப்பீர்கள்."

—ஜனாப். M. அப்துல் சத்தார்

---

காவார் என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒரு குடியானவன் எருது பூட்டி வயலில் உழத் தொடங்கினான். சிறிது உழுத பின் எருது மேலும் நடந்து செல்ல மறுத்தது. குடியானவன் அவ்வெருதைத் தொந்திரவு செய்யவே, அது மனிதர் குரலில் "நீ கஷ்டப் படுவதில் என்ன பயன்? இந்தவயல் முழுதும் வெள்ளத்தில் மூழ்கப்போகிறது" என்றது. இதனால் ஆச்சரியமடைந்த குடியானவன் கிராமஜனங்களுக்குஇந்த சமாசாரத்தைச் சொல்லி அழைத்து வந்தான். அவர்கள் வந்ததும் எருது முன்போலவேகூறி உடனே திடீரெனக் கீழே வீழ்ந்து இறந்தது.

என் கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்)

சென்னை 1936ஸு ஜூன்மீ 5உ

# சேரவாரும்

சேரவீரும்; சகோதரரே! சேரவாரும். எங்கே? காங்கரஸில் சேரவாரும். ஏன்? காங்கரஸ் ஒன்றே இந்தியாவின் விடுதலைக்குப் போராடும் மகா சபை; ஆதலால் அதில் சேரவாரும்.

## காங்கரஸ் யாருடையது?

இந்திய தேசிய காங்கரஸ் இந்தியர் அனைவர்க்கும் உரியது. அஃது ஒரு கூட்டத்தார்க்கு மட்டும் உரியதன்று. இந்தியரனைவரும் இந்திய தேசிய காங்கரஸ்காரரே யாவர். 'இந்தியரனைவரும் எப்படிக் காங்கரஸ்காரராவர்? இந்தியாவில் எத்தனையோ கட்சிகளிருக்கின்றன. காங்கரஸைக் குறைகூறும் இந்தியரும் இருக்கிறார். இவ்வாறாக, இந்தியரனைவருங் காங்கரஸ்காரர் என்று எப்படிக் கூறலாம்?' என்று கேட்பவர் இருப்பர்.

ஐரோப்பாவில் மாபெரும் போர் நடைபெற்றபோது இங்கிலாந்தும் அப்போரில் தலைப்பட்டது. ஆங்கிலேயர் எல்லாரும் அப்போரில் தலைப்பட்டனரோ? போரில் தலைப்படலாகாது என்று சொன்னவரும் இருந்தனர். ஆனால் போருக்குச் சென்றது இங்கிலாந்து என்றே சொல்லப்பட்டது. பார்லிமெண்ட் முறையே தவறுதலுடையது என்று சொல்வோருமுளர். இதனால் பார்லிமெண்ட் பிரிட்டன்சபையன்று என்று சொல்லலாகுமோ? இவ்வாறு பல உதாரணங்கள் எடுத்துக் காட்டலாம். இந்தியாவிலும் காங்கரஸை இழித்துக்கூறுவோர் சிலர் இருக்கிறார். காங்கரஸ் உழைப்பால் சுயராஜ்யம் வந்தால், அச்சுயராஜ்யம் அச்சகோதரர்க்கும் உரியதாகுமன்றோ? ஆகவே காங்கரஸ் இந்தியர் எல்லார்க்கும் உரியதே.

## நாலணா சந்தா

'காங்கரஸ் இந்திய ரனைவருக்கும் உரிய சபையானல், நாலணா சந்தா தந்தவர் மட்டும் காங்கரஸ்காரர் என்று அழைக்கப்படுதல் என்னே?' என்ற ஐயம் பிறக்கலாம். இதற்கென்ன பதிவிறுப்பது?

விடுதலைப் போரை நடாத்துவதற்கு ஒருவித அமைப்பு வேண்டும். அவ்வமைப்பின் பொருட்டு ஒரு சிறு சந்தா, சில ஒழுங்கு முறைகள், நிர்வாக சபை, காரியக் கூட்டம் முதலியன ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவை யாவும் ஒழுங்கு முறைகளைக் காப்பதற்கும், காரியங்களை நேர்மையில் நடத்துதற்கும் அமைக்கப்படுவன. இவ்வமைப்பு நாட்டின் பிரதிநிதி சபையேயாகும். ஆகவே காங்கரஸ் என்பது இந்தியரனைவர்க்கும் உரிய ஒரு மகா சபை என்று ஒவ்வோர் இந்தியரும் கருதல் வேண்டும். இவ்வாறு கருதாத இந்தியர் இருப்பின், அவரது மனோ நிலையை மாற்றக் காங்கரஸ் ஊழியர்கள் முயலல் வேண்டும். நாலணா சந்தா செலுத்துவோர் அமைப்பில் சேர்பவராவர். மற்றவர் அதில் சேராதவர். நாலணா சந்தா செலுத்தாமலும் காங்கரஸ்காரராயிருக்கலாம்.

## மற்ற இயக்கங்களும் அந்நியமும்

'இந்திய நாட்டிலே எத்தனையோ இயக்கங்கள் தோன்றியுள்ளன. அவைகளின் கதி என்ன' என்று சில சகோதரர்கள் கருதலாம். இயக்கங்கள் பல இருக்கலாம்; இன்னும் பல தோன்றலாம். வாழ்வுக்குரிய துறைகள் எவ்வளவோ உண்டு. அவை ஒவ்வொன்றற்கும் ஒவ்வோர் இயக்கம் இருக்கலாம். அவைகளுள் ஒன்றேனும் காங்கரஸுக்கு மாறுபடலாகாது. ஈரல், நெஞ்சு, தாமரை, மூளை முதலிய கருவிகளிருக்கின்றன. இவைகள் வெவ்வேறு பெயரால் அழைக்கப்பட்டாலும், வெவ்வேறு கடன்களை ஆற்றினாலும், இவைகளின் செயல்களெல்லாம் ஓர் உடலின் நலனையே நாடுவன என்பது சிந்திக்கத்தக்கது. இதேபோல் எவ்வித இயக்கமும் காங்கரஸ் நலன் ஒன்றையே நாடுவதாயிருத்தல் வேண்டும்.

சில சமயம் நோய்தாத்தக்க அந்நியம் (Foreign matter) உடலில்இடம் பெறுவதுண்டு. அந்நியத்தை உடலில் வைத்து ஓம்புவது நல்லதாமோ? அந்நியத்தைப் போக்க முயலல்வேண்டும். இல்லையேல் உடலுக்கு ஊறு நேரும். அந்நியத்தைப் போன்ற இயக்கங்கள் நாட்டில் எழுமானல், அவைகளைக் களைய நாட்டவர் முயன்றே தீரல் வேண்டும்.

## காங்கரஸ் வளர்ச்சி

தேசவிடுதலைக்கென்று ஏற்பட்டுள்ள மகாசபை காங்கரஸ் ஒன்றே என்பது உலகறிந்ததொன்று. அதற்கு ஆக்கந் தேடவேண்டுவது தேசமக்கள் கடமை. அக்கடனாற்றச் 'சேர வாரும்' என்று சகோதரரை அழைக்கிறோம்.

காங்கரஸின் வயது ஐம்பதுக்கு மேலாகிவிட்டது. ஐம்பது ஆண்டாகக் காங்கரஸ் பலதிறத் தொண்டுகளை ஆற்றியிருக்கிறது. காங்கரஸினல் தேசமுழுவதும் விழிப்பு ஏற்பட்டிருத்தல் வெள்ளிடைமலை. காங்கரஸுக்கு மாறுபட்ட இயக்கங்களை நடாத்த முற்பட்டுள்ளாரும் காங்கரஸால் விழிப்புப்பெற்றவராகவேயிருப்பர். காங்கரஸ் காலத்துக்கேற்ற தொண்டு ஆற்றி ஆற்றித் தேசநலனை நாடி வருகிறது.

காங்கரஸ் சிலகாலம் உத்தியோகத்திலேயே கருத்துச் செலுத்தி வந்தது; சிலகாலம் ஹிம்ஸையில் எண்ணஞ்செலுத்திப்பார்த்தது; சிலகாலம் நியாயவரம்புக்குட்பட்ட கிளர்ச்சியில் தலைப்பட்டது; இப்பொழுது அஹிம்ஸா தர்மத்தைக் கடைப்பிடித்து நிற்கிறது. காங்கரஸ் வாயிலாக எழுந்த அஹிம்ஸா தர்மப்போர் நாட்டைப் பல வழியிலும் விழிக்கச் செய்தது. இப்பொழுதே காங்கரஸை நன்முறையில் நடாத்தத் தலைவர்கள் உறுதிகொள்ளல்வேண்டும். செல்வம் வந்த காலத்தில் செருக்குக் கொள்வது அறியாமையன்றோ?

## வகுப்புணர்வு

நாட்டில் விழிப்பு உண்டாக உண்டாக நாட்டிலுள்ள குற்றங்குறைகள் வெளிப்படுதல் இயல்பு. நமது நாடு பலவித வகுப்புக்களால் ஆக்கப்பட்டது. வகுப்புணர்வு நாளுக்குநாள் பெருகியே வருகிறது. காங்கரஸ் தோன்றியபோது தேசத்தில் வகுப்புக்களில்லாமலில்லை. அப்பொழுதும் வகுப்புக்களிருந்தன. ஆனல் அவைகளைப்பற்றிய உணர்வு எழவில்லை. இப்பொழுது - காங்கரஸ் செல்வாக்குப் பெருகப்பெருகத்-தேசம் விழிக்க விழிக்க - வகுப்புணர்வும் உடனுக்கு உடன் பெருகி வருகிறது. முஸ்லிம் லீக், ஹிந்து மகாசபை, தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் முதலியன வகுப்புணர்வை அடிப் படையாகக் கொண்டன. வகுப்புணர்வில் தேசம் மறைந்துபோகும். இதைத் தேசபக்தர் உன்னுவாராக. வகுப்புணர்வை அடக்கச் சில அறிஞர் ஆங்காங்கே முயல்கிறார். அவர் தம் முயற்சியால் பயன் விளையவில்லை. காந்தியடிகள் பெருமுயற்சி செய்தார். அவர் முயற்சியையும் வகுப்புணர்வு விழுங்கிவிட்டது.

இப்பொழுது வழங்கப்பெற்றுள்ள சீர்திருத்தம் வகுப்புணர்வை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இச்சீர்திருத்தம்மேலும்மேலும் வகுப்புணர்ச்சியை வளர்க்கப்போகிறது. மந்திரிப் பதவி மோகம் சும்மா இருக்குமோ? அது, வகுப்புணர்ச்சியைப் பெருக்கிக் கொண்டே போகுமன்றோ? இப்பெருக்கம் தேச சுதந்திர உணர்வை எப்படி எழுப்பும்?

## பதவி மோகமும் கட்சிகளும்

மந்திரிப்பதவி மோகம் வகுப்புணர்ச்சியை மட்டுமா எழுப்பும்? பல கட்சிகளையும் உண்டுபண்ணி வரும். நமது தென்னாட்டில் இப்பொழுது எத்தனைக் கட்சிகள் தோன்றியிருக்கின்றன! இன்னும் பலகட்சிகள் தோன்றும்போலும்! லிபரல்கட்சியென்றும், ஜஸ்டிஸ்கட்சியென்றும் இரண்டு கட்சிகளிருக்கின்றன. இப்பொழுது பித்தாப்பூர் கட்சியென்றும், வேங்கடராம சாஸ்திரியார் கட்சியென்றும், ஜி. ஏ. நடேசன் கட்சியென்றும்புதுப்புதுக்கட்சிகள்தோன்றி வருகின்றன. இவ்வளவு கட்சிகள் எற்றுக்கு? தேசத்துக்குச் சுயராஜ்யம் வந்து விட்டதா? இல்லையே! சுயராஜ்யமில்லாத தேசத்தில் பல கட்சிகள் எற்றுக்கு? படித்தவர்க்கு அரசியல் ஞானம் சூன்யமாகி விட்டது போலும்! வகுப்புணர்வு வளர்தற்கும், கட்சிகள் பெருகுதற்கும் அடிப்படையாக நிற்பது எது? பதவிமோகம் என்று சொல்லவும் வேண்டுமோ?

## தேசபக்தர் கடமை

இந்நிலையில் காங்கரஸ்காரர் என்ன செய்தல் வேண்டும்? காங்கரஸ்காரர் தம்மைத் தேச ஊழியர் என்பதையும், வகுப்பு ஊழியரல்லர் என்பதையும் மறத்தலாகாது. வகுப்புணர்வுடையோர் எக்காரணம் பற்றியும் காங்கரஸ் நிர்வாகத்தில் இருத்தலாகாது. வகுப்புணர்வு அற்றவரால் காங்கரஸ் நிர்வாகம் நடைபெறுதல் நியாயம். வகுப்புணர்வுள்ள தேசத்தில் சுயராஜ்யப் போர் தொடுத்துள்ள காங்கரஸுக்கே பொறுப்பு அதிகம் என்று சொல்லவேண்டுவதில்லை. காந்தியடிகள், அபுல்கலாம் அஸாத், ஜவஹர்லால் நேரு முதலிய தேசபக்தர்கள் வகுப்பு வாதங் கடந்து, தேசிய உணர்வில்மூழ்கிக் காங்கரஸ் தொண்டுசெய்து வருகிறார்கள். இவர்கள் போன்ற தலைவர்கள் பெருகப்பெருக நாட்டுக்கு நலன் விளையும்.

## தமிழ் நாட்டின் நிலை

தமிழ் நாட்டின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். தமிழ் நாடு எந்நிலையிலிருக்கிறது? உலகிலுள்ள சண்டைகளெல்லாம் தமிழ் நாட்டிலுண்டு. சாதிச் சண்டை, மதச் சண்டை, மொழிச் சண்டைமுதலிய சண்டைகளுக்கு நிலைக்களனாகி விட்டது நமது அருமைத் தமிழ் நாடு. தேசபக்தி முருகி எழுமானல் எல்லாச் சண்டைகளுந் தொலையும். தேசபக்தியை எழுப்ப வேண்டிய பொறுப்பு யாருடையது? காங்கரஸ்காரருடையது. தமிழ் நாட்டுக் காங்கரஸ், வகுப்புணர்வை ஒழிக்கப் போதிய தொண்டு செய்ய வில்லை என்றே கூறலாம். காங்கரஸ் முனைந்து வேலை செய்வதாக.

## தமிழ் நாட்டுத் தலைவர்

தமிழ் நாட்டுக்குப் பெரு நோக்குடைய தலைவர் தேவை. தற்போது காங்கரஸ் நிர்வாகத்தில் தலைமை வகித்துள்ள ஒருவர் தமிழ் நாட்டில் பிளவையும் பிணக்கையுமே பெருக்கி வருகிறார். "காங்கரஸுக்குச் செல்வாக்கு உண்டு; எல்லாஞ் செய்யலாம்" என்று அவர் கருதுகிறார்போலும். அவர் காங்கரஸ் நிர்வாகத்தில் தலைமை பெற்றிருத்தலால், அவர்தம் பொருந்தாச் செயலை மறுக்கக் காங்கரஸ் நிர்வாகிகள் பலர் முன் வருகிறாரில்லை. சிறந்த தேசபக்தரும், காங்கரஸின் உண்மை ஊழியரும், வகுப்பு வாதத்தை முற்றிலும் வெறுப்பவரும், பல தேர்தல்களில் தமது வீரப்பேச்சால் காங்கரஸுக்கு வெற்றி தேடியவருமாகிய திரு - ம. இரத்தினசபாபதி முதலியார் போன்றவர்கள் மனமும் புண்படும் முறையில் தமிழ் நாட்டின் தற்காலக் காங்கரஸ் நிர்வாகத் தலைவர் நடந்து வருகிறார்! செருக்கு அவரைப் பிடித்து ஆட்டுகிறது, செருக்கால் அழிந்தவர் கதைகள் அவருக்குத் தெரியும். தலைவர் செயல்கள் பல கூட்டங்களில் மறுக்கப்பட்டு வருகின்றன.

திரு - சத்தியமூர்த்தி நம் நண்பர்; நாவலர்; சட்ட சபையில் திறம் படக் கடனாற்றுவோர். ஆனல் காங்கரஸ் நிர்வாகத் தலைவராயிருப்பதற்கு அருகரல்லாதவர். பொறுப்புள்ள பதவிக்குத் தாம் அருகரல்ல என்பதை நாளுக்குநாள் திரு - சத்தியமூர்த்தி நாட்டுக்கு விளங்கச் செய்தே வருகிறார். இனியாதல் சத்தியமூர்த்தி தம்மைப் பண்படுத்திக் கொள்வாராக.

## ஆச்சாரியார் பொறுப்பு

தமிழ் நாட்டின் பொறுப்பு திரு. சத்தியமூர்த்தியினிடமில்லை. அப்பொறுப்பு அறிஞர் - சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரிடத்திலேயே இருக்கிறது. அவர் ஏதோ சில காரணம்பற்றித் திரு. சத்திய மூர்த்தியைத் தலைவராக்கினர். போனது போக. இனியாவது - திரு. இராஜகோபாலாச்சாரியார் நல்வழி காண்பாரென நம்புகிறோம்.

## ஆச்சாரியார் - நாயக்கர் சந்திப்பு

திரு. ஆச்சாரியாரும், திரு. நாயக்கரும் குற்றாலத்தில் நீண்டநேரம் அந்தரங்கமாகப் பேசினர் என்று அறிகிறோம். அப்பேச்சின்போக்கு எதுவாயிருக்கும் என்று நாம் ஒருவாறு ஊகித்துள்ளோம். திரு-ஆச்சாரியார், திரு-நாயக்கரைப்பழையபடி காங்கரஸில்சேருமாறு வலியுறுத்தியிருப்பர். திரு - நாயக்கர் சில நிபந்தனைகளைக் கிளத்தியிருப்பர். அந்நிபந்தனைகளுள் ஒன்று வகுப்புரிமையாயிருக்கலாம்; மற்றொன்று சீர்திருத்தப் பிரசார உரிமையாயிருக்கலாம், இவ்விரண்டும் திருநெல்வேலிக் கூட்டத்தில் திரு. நாயக்கரால் சொல்லப்பட் டிருக்கின்றன. வகுப்புரிமை உணர்வைக் காங்கரஸில் நுழைப்பது நன்றுயில்லை. அதனல் பல கேடுகள் பின்னே விளையும். சீர்திருத்தப்பிரசார உரிமைஎப்பொழுதும்எவர்க்கும்உண்டு.

## நாயக்கருக்கு விண்ணப்பம்

நண்பர் - இராமசாமி நாயக்கர் தமிழ் நாட்டில் காங்கரஸ் தொண்டை ஆர்வத்தோடு செய்தவர். தமிழ் நாட்டின் தற்கால எழுச்சிக்கு அவரும் ஒரு காரணர் என்று கூறல் மிகையாகாது. ஏதோ சில காரணம் பற்றி அவருக்கு மருட்சி ஏற்பட்டிருக்கலாம். இன்னும் அவருக்குக் காங்கரஸ் பற்று உண்டு என்பதே நமது நம்பிக்கை. திரு - நாயக்கருக்குப் பல முறை நாம் விண்ணப்பஞ் செய்ததுண்டு. இம்முறையும் அன்பார்ந்த விண்ணப்பஞ் செய்கிறோம். தோழரே! காங்கரஸ் பொது அமைப்பு. அஃது ஒரு கூட்டத்தார்க்கு மட்டும் உரியதன்று. நிர்வாக முறையில் ஒவ்வொருவர் ஒவ்வொருவித பிழை செய்திருக்கலாம். மனிதர் தவறுதலைக் காங்கரஸ் மீது சுமத்தலாகாது. தவறுதல் நாளடைவில் ஒழுங்குபட்டு விடும். நீங்கள் காங்கரஸுடன் பிணங்கிச் செய்த காரியங்கள் பல. அவைகளிற் சில காங்கரஸ் ஆக்கத்துக்குத் துணையே செய்திருக்கின்றன. இனிப் பிணக்கம் வேண்டுவதில்லை. வகுப்புரிமையை வலியுறுத்தல்வேண்டாம். மனத்தைத்திடப்படுத்திப் பழையபடி காங்கரஸ்தொண்டாற்ற வருமாறு கேட்டுக் கொள்கிறோம். நாம் மட்டும் உங்களை அழைக்கவில்லை. தமிழ்நாடு உங்களை அழைக்கிறது. அழைப்புக்கு இணங்குங்கள். நலம் விளையும். சேரவாரும்; வாரும்.

அறிஞர் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் ஓர் அந்தரங்கக் கூட்டங் கூட்டித் தக்கவருடன் கலந்தாலோசித்துத் தமிழ்நாட்டின் தற்காலக்காங்கரஸ் நிர்வாகத்தைத் தூய்மை செய்ய முயல்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

# இடியேறு

## சந்தாதாரர்களுக்கு ஒரு விண்ணப்பம்

பழைய சந்தா நேயர்கட்கு வழக்கம் போல 'நவசக்தி' அனுப்பப்படும். நேயர்கள் சந்தாவை மணியார்டர் மூலம் செலுத்துவது நலம். வி. பி. மூலம் செலவு அதிகம் என்பது நேயர்கட்குத் தெரியும்.

## தாமஸ் குற்றவாளியே

திரு. தாமஸ் என்பவர் 'என்ஜின் கிளீனர்' பதவியிலிருந்து பிரிட்டிஷ் மந்திரிசபை அங்கத்தவர் பதவிவரை படிப்படியே நடந்தும் கடந்தும் வந்தவர். இவர்வாழ்வில் வெற்றிபெற்றவர்என்று சொல்லப்பட்டு வந்தது. இப்பொழுது அது தோல்வியாய் முடிந்திருக்கிறது. வரவுசெலவுத் திட்டம் காமன்ஸ் சபையில் கிளத்தப்படு முன்னர், அதைப்பற்றிய விவரம் வெளியாகிவிட்டது. வெளியீட்டுக்குக் காரணர் யார் என்பதைக் காண விசாரணைக் குழு அமைக்கப்பட்டது. அக்குழுவின் தீர்ப்பு இப்பொழுது வெளிவந்திருக்கிறது. அதில் மந்திரிமாருள் ஒருவராகிய திரு. தாமஸ்மூலமாகவே வரவுசெலவுத்திட்ட விவரம் வெளிவந்ததாக உறுதிசெய்யப்பட் டிருக்கிறது. திரு. தாமஸுக்குத் திரு. பேட்ஸ் என்பவர்நண்பர். திரு. தாமஸ் தமது சுயசரிதத்தை எழுதித்தரத் திரு. பேட்ஸினிடம் ஒப்பந்தம் செய்துகொண்டு, 15000 பவுன் வாங்கினராம். திரு. பேட்ஸ் வரவுசெலவுத் திட்ட விவரத்தை முன்னரே தெரிந்து கொண்டமையால், அவர் பெரும் இலாபம் அடைய நேர்ந்ததென்று சொல்லப்படுகிறது. இதற்குத் துணை நின்றவர் திரு. தாமஸ் என்பது உறுதி செய்யப்பட்டது. விசாரணைக்கு முன்னரே திரு. தாமஸ் தமது மந்திரிப் பதவியினின்றும் விலகிவிட்டார். "தீர்ப்பு மிகக் கொடுமையானது" என்றும், "ஆண்டவன் அருள்" என்றும் திரு. தாமஸ் சொல்லிக்கொண் டிருக்கிறாராம். இனி காமன்ஸ் சபை என்ன செய்யப்போகிறது? பார்ப்போம்!

# தெய்வ முழக்கம்

உலகமெலாங் கடந்துகடந் தொளிருமொரு தெய்வம்
உலகுதொறுங் கலந்துகலந் தோங்குவிக்குந் தெய்வம்
இலகுசரா சரமெல்லாம் இயக்கிநிற்குந் தெய்வம்
இன்பறிவாய் அன்பருளாய் என்றுமுள தெய்வம்
அலகிலொளி ஒலியாகி அகிலஞ்செய் தெய்வம்
அருக்கனிலும் நடம்புரியும் ஆனந்தத் தெய்வம்
பலசமய ஒருமையிலே பயன்விளைக்குந் தெய்வம்
பழம்பொருட்கும் பழம்பொருளாம் பழந்தெய்வம் பாரே. (1)

அங்கிங்கென் னுதபடி எங்குமுள தெய்வம்
அளவைகளுக் கெட்டாத அகண்டிதமாந் தெய்வம்
பொங்கியற்கை உடற்குயிராய்ப் பொலிகின்ற தெய்வம்
பொழிகருணை உயிர்களுக்குப் புகலாகுந் தெய்வம்
தங்கியற்கை நெறியினிலே தாண்டவஞ்செய் தெய்வம்
சாகாத வாழ்விக்குச் சான்றுடைய தெய்வம்
புங்கவர்தம் நெஞ்சினிலே புகுந்திருக்குந் தெய்வம்
புதுப்பொருட்கும் புதுப்பொருளாம் புதுத்தெய்வம் போற்றே.

மண்புனல்தீ வளிவெளியாய் மன்னிநிற்குந் தெய்வம்
மதிகதிராய் மன்னுயிராய் மகிழ்விக்குந் தெய்வம்
கண்முதலாம் உடற்பொறிக்குக் கதிக்கின்ற தெய்வம்
கருத்தினிலே கோயில்கொண்டு காக்கின்ற தெய்வம்
எண்ணெழுத்தாய் ஒலியிசையாய் இசைப்பயனாந் தெய்வம்
[illegible] இயம்புகின்ற தெய்வம்
உண்மையறி வானந்த உருவான தெய்வம்
ஒருநெறியாய்ப் பொதுமையிலே [illegible] (3)

விண்ணூடு நீலவொளி விரிக்கின்ற தெய்வம்
வெண்கோளாய்ச் செங்கோளாய் மின்னுகின்ற தெய்வம்
கண்ணூறும் மதியாகி நிலவுபொழி தெய்வம்
கனிச்சுடராய் வெளிதுலங்குஞ் சுத்துடைய தெய்வம்
மண்ணாகி மலையாகி மணங்கமழுந் தெய்வம்
மரமாகிக் காடாகி வளர்பசுமைத் தெய்வம்
பண்ணூறு பாட்டாகிப் படர்கொடித் தெய்வம்
பரவையாய் அலைகொழிக்கும் பரதெய்வம் பாரே. (4)

நீருந்து மாணிக்கத்தில் நிலவுகின்ற தெய்வம்
நிறைஅமைதி ஆவினத்தில் பொருந்தியுள்ள தெய்வம்
காமருசீர் குயில்குரலில் கலந்தளிக்குந் தெய்வம்
கானமயில் நடத்தினிலே காட்சியளி தெய்வம்
வாரமிகு பைங்கிளியாய் வாய்மலருந் தெய்வம்
வானப்புள் பாட்டொலியாய் வாழுகின்ற தெய்வம்
நாரலரில் வண்டிசையாய் நாதஞ்செய் தெய்வம்
நல்லரவாய்ப் படமெடுத்து நண்ணுதெய்வம் நாடே. (5)

இயற்கைஅன்னை தனைக்கலந்தே இன்பளிக்குந் தெய்வம்
ஏகாந்த இனிமையிலே இயங்குகின்ற தெய்வம்
செயற்கையெலாம் ஒடுங்கிடத்தில் திகழுகின்ற தெய்வம்
சிந்திக்கச் சிந்திக்கச் சிந்தனையாந் தெய்வம்
உயிர்க்கெல்லாம் உயிர்ப்பாகி ஊக்கமளி தெய்வம்
ஒழுக்கத்தில் உயர்ந்தோருக் கொழுக்கான தெய்வம்
பயிற்சியினால் மனங்குவிந்தால் பார்வையளி தெய்வம்
பாராதி அண்டமெலாம் பரவுதெய்வம் பாரே. (6)

ஆதியின்றி அந்தமின்றி அறுதியற்ற தெய்வம்
அகலமொடு நீளமற்ற அளப்பரிய தெய்வம்
சாதிமதக் கட்டுகளில் சாராத தெய்வம்
சமயப்போர்ச் சாத்திரத்தின் சார்பில்லாத் தெய்வம்
நீதியிலே விளங்குகின்ற நின்மலமாந் தெய்வம்
நித்தியமாய்ச் சத்தியமாய் நிறைந்துள்ள தெய்வம்
சோதியெலாம் விளங்கும்அருட் சோதியெனுந் தெய்வம்
சுதந்திரத்தின் சுதந்திரமாஞ் சுத்ததெய்வம் சூழே. (7)

அறிவினிலே உணர்வோருக் கறிவாகுந் தெய்வம்
அன்பினிலே தெளிவோருக் கன்பாகுந் தெய்வம்
அறியாமை செயற்கழுதால் அணைந்திரங்குந் தெய்வம்
அன்பிலர்க்கும் அன்பூட்ட ஆர்வங்கொள் தெய்வம்
செறிஉயிர்க்கு நலஞ்செயவே சீவிக்குந் தெய்வம்
சிந்தனையில் தேனெனவே தித்திக்குந் தெய்வம்
வெறிமலர்வாய்ப் பெண்மொளியில் விளங்குகின்ற தெய்வம்
விண்ணுலகும் மண்ணுலகும் விளம்புதெய்வம் மேவே. (8)

அண்டமெலாம் அடுக்கடுக்காய் அமையவைத்த தெய்வம்
அவைஇயங்க ஓயாமல் ஆற்றலளி தெய்வம்
பிண்டமெலாம் ஒழுங்குபெறப் பிறப்பிக்குந் தெய்வம்
பிறக்கும்உயிர் அத்தனைக்கும் பேரருள்செய் தெய்வம்
தண்டனையே அறியாத தயையுடைய தெய்வம்
தாயினிலும் பரிவுடைய தனிக்கருணைத் தெய்வம்
தொண்டர்படை உயிர்ப்பாகச் சூழுகின்ற தெய்வம்
சூதுபகை கொலையற்ற தூயதெய்வம் சொல்லே. (9)

கருவினிலே பிறவாது கருவளிக்குந் தெய்வம்
காரணமின்றி உயிர்களுக்குக் காணம்அமை தெய்வம்
கருதுமனமின்றியெலாங் கருதுகின்ற தெய்வம்
கண்களின்றி எதையெதையுங் காணுகின்ற தெய்வம்
உருவின்றி எங்கெங்கும் உலவுகின்ற தெய்வம்
ஓதலின்றி மறையெல்லாம் ஓதுவிக்குந் தெய்வம்
குருவினுளத் திலங்கியுண்மை குறித்தருளுந் தெய்வம்
குறைவில்லா நிறைவான கோதில்தெய்வங் கூறே. (10)

—திரு. வி. க.

# மகாத்மா காந்தியின் சுற்றுப் பிரயாணம்

## குதூகலமான வரவேற்பு

மகாத்மா காந்தியும் அவரது கோஷ்டியினரும் கோலார் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்தனர்; சிக்பல்லாபூர், சிந்தாமணி, கோலார், பௌரிங் பேட்டை முதலிய இடங்களைப் பார்வையிட்ட பின்னர்ப் பெங்களூரையடைந்தனர். ஜூன் 13-ந் தேதி வரை அவர்கள் பெங்களூரிலேயே இருப்பார்களெனத் தெரிகிறது.

## நிரம்பக் கொஞ்சம்

சிக்பல்லாபூரில் மகாத்மாவுக்கு உற்சாகமான வரவேற்பு நடைபெற்றது. நகர சபையார் ஓர் உபசாரப் பத்திரமளித்தனர். நகர ஜனங்கள் 100 ரூபாய் கொண்ட பணமுடிப்பு ஒன்றைக் காந்தியடிகளுக்குச் சமர்ப்பித்தனர். அடிகள் அதைப் பெற்றுக்கொண்டு "நூறு ரூபாய் தானா? நிரம்பக் கொஞ்சம்; இதைப் போல மூன்று மடங்கு கொடுத்தாலும் குறைவுதான்" என்றார்.

சிக்பல்லாபூரிலிருந்து அடிகள் சித்லகட்டாவிற்குப் பிரயாணமானார். அங்கு அடிகளைத் தரிசிக்க ஏராளமான ஜனங்கள் காத்திருந்தார்கள். நகரசபையார் அடிகளுக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்தளித்தனர். 100 ரூபாய் கொண்ட பணமுடிப்பு அளிக்கப்பட்டது.

## இறப்பதன் முன்

அதன் பின் அடிகள் சிந்தாமணியை அடைந்தார். சிந்தாமணி நகர சபையினர் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்தளித்தனர். அங்கு 201 ரூபாய்கொண்ட பண முடிப்பு ஒன்று அடிகளுக்குக் கொடுக்கப்பட்டது.

மகாத்மா காந்தி கூட்டத்திலிடையே பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நான் இறப்பதற்குமுன் இந்தியாவிலுள்ள எல்லா மாகாணத்து மக்களும் ஹிந்தி பேசுவதைப் பார்க்கலாமென நம்புகிறேன். ஹிந்தியைப்பரப்புவதால் தாய்ப்பாஷை பாதிக்கப்படுமென எண்ணவேண்டாம். தாய்மொழியைப் பலப்படுத்தவே ஹிந்தி உபயோகப்படும். இன்று மைசூர் மகாராஜாவின் பிறந்த நாள்கொண்டாட்டத்தில் நானும்உங்களுடன்கலந்துகொள்கிறேன்; மைசூர் மகாராஜாவுக்குப் பூரண ஆயுளும் கீர்த்தியும் அளிக்க ஆண்டவனை வேண்டுகிறேன்."

சிந்தாமணியிலிருந்து கோலாருக்கு அடிகள் பிரயாணமானார். கோலார் அதிகாரிகள் அடிகளுக்கு மாலையிட்டு வரவேற்றார்கள். கோலார் நகரசபை அடிகளுக்கு ஒரு வரவேற்பளித்தது. அங்கு 200ரூபாய்கொண்ட பணமுடிப்பு அடிகளுக்குக் கொடுக்கப்பட்டது.

## "போற்றுகிறேன்"

வரவேற்புக்குப் பதிலளிக்கையில் அடிகள் கூறியதாவது:—"சமஸ்தானமெங்கும் கதர்ச் சாலைகள் அமைத்திருப்பதற்காக மைசூர் அரசாங்கத்தை நான் போற்றுகிறேன். இந்தியாவில் எந்தப் பாகத்திற்குப் போனலும் 'மைசூர் ஜனங்கள் கதர் உடுத்துகிறார்கள்; சுதேசிப்பொருள்களையே உபயோகிக்கிறார்கள்' என்று கூறுவேன்."

பிறகு மகாத்மா பௌரிங்பேட்டைக்குச் சென்றார். அங்கு 285 ரூபாய் கொண்டபணமுடிப்புஅளிக்கப்பட்டது.

அப்புறம் காந்தியடிகள் தங்கவயலுக்குச் சென்றார். தொழிலாளர்கள், சூதாட்டத்தையும் கள்ளையும் விரும்பக்கூடாதென்று அடிகள் அங்குக் கூறினர்; தொழிலாளர்களின் சௌகரியத்திற்காக உழைக்குமாறு அதிகாரிகளுக்குச் சொன்னர். ரூபாய் 619 கொண்ட பணமுடிப்பு ஒன்று அளிக்கப்பட்டது.

"தங்க வயலிலிருந்து இந்த 619 ரூபாய் கிடைப்பது ஒரு பெரிய தொகையல்ல" என்று மகாத்மா கூறினர்.

பின்னர் அடிகளும் அவரது கோஷ்டியினரும் சென்ற ஞாயிற்றுக்கிழமை மாலை பெங்களூரை அடைந்தனர்.

# கலம்பகம்

சென்ற ஞாயிற்றுக்கிழமை மைசூர்மகாராஜாவின் பிறந்ததினம் சமஸ்தானமெங்கும் கொண்டாடப்பட்டது.

o o o

பண்டித ஜவஹர்லால் நேருவின் சுயசரிதம் முதற்பதிப்பு முற்றும் விற்றுப் போயிற்று. இரண்டாம்பதிப்பு லண்டனில் அச்சிலிருக்கிறது.

o o o

மாஸ்கோ நகரில் உபத்திரவமில்லாத பிரசவமுறை கையாளப்பட்டு வருகிறது. இதுவரை ஆயிரம் ஸ்திரீகள் இம்முறையில் பிரசவித்திருக்கிறார்கள்.

o o o

பம்பாயைச் சேர்ந்த ஜிம்மோடி என்ற ரோவர் சாரணன் இரண்டுவருஷங்களாக 17000 மைல் சைகிளில் பிரயாணம் செய்து லண்டனை அடைந்தான்.

o o o

கும்பகோணம் நகரசபையார் 'காந்தி பார்க்கில்' ரேடியோ அமைக்கப் போகின்றனர். அதற்கான செலவை ஸ்ரீ. ஜயராம் நாயுடு ஏற்றுக்கொள்வார்.

o o o

ஸ்ரீமதி மாக்ஸிமியானி போர்டக்ஸ் என்ற கிரேக்கக் கிறிஸ்தவப்பெண் சென்ற திங்கட்கிழமை ஹிந்து மதத்தைத் தழுவினார். அவரது ஹிந்துப் பெயர் ஸாவித்ரிதேவி என்பது.

o o o

எல்லைப்புற காந்தியான கான் அப்துல் காபர்கான் பெரில்லி சிறையிலிருந்து அல்மோரா சிறைக்கு மாற்றப்படுவார். அவர் உடல்நிலை குணமாக இருந்து வருவதாகத் தெரிகிறது.

o o o

பண்டித ஜவஹர்லால் நேரு தமது சொந்த நூல் நிலையத்திலிருந்து அலகாபாத் அரசியல் கைதிகள் நூல்நிலையத்திற்கு ஏராளமான புத்தகங்களையும் பத்திரிகைகளையும் அளித்திருக்கிறார்.

o o o

கும்பகோணத்தைச் சேர்ந்த நாச்சியார் கோயிலில் டாக்டர் அன்சாரியின் ஞாபகார்த்தமாகச் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஒரு பூந்தோட்டம் ஏற்படுத்தப்பட்டது. அதற்கு 'அன்சாரி பார்க்' என்றுபெயர்.

o o o

திருவையாற்றிற்கு மின்சார விளக்குப் போடப்படும். அதற்காக வேலைகள் எல்லாம் முடிந்து விட்டன. திருவையாறு பஞ்சாயத்தார் தற்காலம்150 தெருவிளக்குகளின் செலவை ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

o o o

அன்னு இவனோவ்னு செடினினு என்ற ஒரு பெண்மணி ருஷியக் கப்பல் ஒன்றுக்குத் தலைவராகவிருந்து வருகிறார். இவர் கப்பல் மேல்தள வேலைக்காரராயிருந்து படிப்படியாகத் தம் புத்திக் கூர்மையால் கப்பற்றலைவரானார்.

o o o

அபிசினியா, எரிட்ரியா, இத்தாலிய சோமாலிலாந்து ஆகிய மூன்று நாடுகளும் சேர்ந்து இத்தாலியக் கிழக்காப்பிரிக்கா என்றழைக்கப்படும். ஐந்து கவர்னர்களின் உதவியால் ஓர் இராஜப்பிரதிநிதி இந்த நாடுகளை அரசாள்வார்.

o o o

தென்னாற்காடு ஜில்லா, கள்ளக்குறிச்சி தாலுக்காவிலுள்ள பேதனூர் கிராமத்தைச் சேர்ந்த கதீஸ்வரர் கோவில் தேவஸ்தானத்திற்கு அம்மா கண்ணுஅம்மாள் என்ற ஒருபெண்மணி தர்மகர்த்தாவாக நியமிக்கப்பட்டிருக்கிறாராம்.

o o o

மாஸ்கோவில் சுமார் 41,200 உபாத்தியாயர்கள் கையெழுத்திட்டு ஸ்டாலினுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்கள்; உபாத்தியாயர்தொழில் சந்தோஷகரமானதாகவும்கௌரவமானதாகவும் இருப்பதாக அதில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

o o o

சென்ற, ஞாயிற்றுக்கிழமை நடந்த சித்தூர் ஜில்லா போர்டு கூட்டம் ஒன்றில் பதினைந்து அங்கத்தினர் எழுந்து வெளியேபோயினர். உபத்தலைவர் பத்துநாளைய முன்னறிவிப்பின்றிச் சில தீர்மானங்களைக் கொண்டுவந்ததே இதற்குக் காரணம்.

o o o

அனந்தபூர் ஜில்லா போர்டார் தம் போர்டிலுள்ளபள்ளிக்கூடங்களில்வேலை பார்க்கும் பட்டம் பெற்ற பண்டிதர்களுக்கும், முன்ஷிகளுக்கும் அரசாங்கத்தார் மாற்றியமைத்த புது விகிதப்படி சம்பளம் கொடுப்பதென்று தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த பள்ளிக்கூடங்கள், சாலைகள், கிணறுகள், சத்திரங்கள் முதலிய யாவற்றினையும் ஜாதிமதபேதமின்றி யாவரும் உபயோகித்துக் கொள்ளலாமெனத் திருவாங்கூர் அரசாங்கத்தார் உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

o o o

எதியோப்பிய சக்கரவர்த்தி லண்டனுக்குப்புறப்படுமுன் ஜிப்ரால்டர்துறைமுகத்தில் ராய்டர் நிருபர் அவரைப் பேட்டிகண்டபோது "ஒழுங்கானமுறைகளை யுபயோகித்து எதியோப்பிய உரிமைகளைக் காப்பதற்காக நாங்கள் ஐரோப்பா செல்கிறோம்." என்றார்.

o o o

பெல்லாரி ஜில்லா போர்டார் தமது ஜில்லாவில் பிரசவத்திற்கும் குழந்தை பாதுகாப்புத் திட்டத்திற்கும் ரூபாய் 3,500 செலவழிப்பதென்று தீர்மானித்திருக்கின்றனர். பிரஜாபிவிருத்திக் கட்டுப்பாட்டை எதிர்ப்பவர்கள் இதனால் குதூகலமடைந்திருக்கிறார்களாம்.

o o o

ஜூலை மாதம் முதல் வாரத்தில் காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு ஒரிசாவில் சுற்றுப் பிரயாணம் செய்வாரெனத் தெரிகிறது. உட்கல் மாகாண காங்கிரஸ் கமிட்டியார் தலைவருக்குச் சிறப்பான வரவேற்பளிக்கத் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

ஸ்ரீசுபாஷ்.போஸ் குர்சாங்கில் தமது சகோதரரின்வீட்டில் வைக்கப்பட்டிருக்கிறார். ஸ்ரீ. சரத் போஸ் அவருடன் சில நாள் தங்கியிருந்தார். ஸ்ரீ சுபாஷ் வீட்டை விட்டு வெளியே செல்வது பற்றி அரசாங்கத்தார் ஒரு உத்திரவும் செய்யவில்லை. அவர் சற்று குணமடைந்திருக்கிறார்.

o o o

திருவாங்கூர் சமஸ்தானத்தில் பொதுஸ்தலங்கள் யாவும் தாழ்த்தப்பட்டோருக்குத் திறந்து விடப்பட்டதைத் தாம் வரவேற்பதாகவும், இவ்விஷயமாக மாகாணத்திலுள்ள தாழ்ந்த வகுப்பினர் யாவரும் திருப்தியடைவதாகவும் ஸ்ரீ. எம். சி. ராஜா; எம். எல். ஏ. கூறுகிறார்.

o o o

விசாகப்பட்டினம் ஜில்லா, கர்பம் சுரங்கத்தில் வேலைசெய்யும் 1200 தொழிலாளர்கள் மேமாதம் 13-ந்தேதி முதல் வேலைநிறுத்தம் செய்து வருகின்றார்கள். சுரங்க அதிகாரிகளான விஜயநகரம் மைனிங் கம்பெனியார் தொழிலாளர்களின் தேவையைப் பூர்த்திசெய்யாததே இதற்குக் காரணம்.

o o o

சிம்லாநகரசபையார் இராஜப்பிரதிநிதி தம் மேற்பார்வையில் 'பால்-உணவு' பிரசாரம் செய்துவருகின்றனர். இதனால் நகரில் பாலுக்கு அதிக கிராக்கி ஏற்பட்டிருக்கிறது. நகரில் அநேக பால்கடைகளும் உண்டாயிருக்கின்றன. இவற்றில் உபாத்தியாயர்களின் தலைமையில் ஏராளமான மாணவர்கள் வந்து பால் சாப்பிடுகிறார்கள்.

o o o

பாம்பன்: ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் ஏழாம் வருடக்குருபூசை, (10, 11—6—36) புதன் வியாழன்களில், சுவாமிகள் அடைந்த திருவான்மியூர் மயூரபுரத்திலும், சுவாமிகள் வதிந்த சென்னை நம்புல்லய்யர் தெரு, 39-வது எண்ணுள்ள இல்லத்திலும், மாங்காடு ஸ்ரீ சிவசண்முகானந்த பக்தஜன சபையிலும் கொண்டாடப்பெறும்.

o o o

மேலைத் தஞ்சை ஜில்லா போர்டார் கோயமுத்தூர் 'ஒய். எம். ஸி. ஏ.' யால் நடத்தப்படும் கோடைகால கிராமச்சீர்திருத்தப் பள்ளிக்கூடத்திற்கு ஆறு ஆரம்பப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களையும்,அண்ணாமலை சர்வகலாசாலையால் நடத்தப்படும் உடற்பயிற்சிப் பள்ளிக்கூடத்திற்கு 4 ஆரம்பஆசிரியர்களையும் அனுப்பத் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

அஸாமிலுள்ள ஜனங்களின் மனப்பான்மை முழுதும் பயங்கர இயக்கத்திற்கு விரோதமாக விருப்பதாலும், பயங்கர இயக்கத்திற்கு எதிராக எங்கும் பிரசாரம் நடப்பதாலும் அடுத்த அக்டோபர் மாதத்தில் பந்தோபஸ்துக் கைதிகள் அனைவரையும் விடுவிப்பதென அஸாம் அரசாங்கத்தார் நிச்சயித்திருப்பதாகப் பத்திரிகைச் செய்தியொன்று கூறுகிறது.

o o o

ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் கிராமச் சீர்திருத்த வேலையில் உழைக்குமாறு அரசாங்க உதவிச் சம்பளம் பெறுவோரையும், மாஜி சோல்ஜர்களையும் கேட்டுக் கொள்வர். அதுபோது 'குற்றபரம்பரை' ஜாதியினரும் கிராமச் சீர்திருத்தம்செய்யுமாறு கேட்டுக்கொள்ளப்படுவர். இதன் பின் குற்றபரம்பரையினர் முன்னேற்ற ஊழியமும் நடைபெறலாம்.

o o o

மீர்ஸாபூர் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெண் தன் தலையில் மண்குடம் நிறையத் தண்ணீருடன் சென்று கொண்டிருந்தாள். ஒரு சிறுத்தை திடீரென அவள் தலை மீது பாய்ந்தது. அதனால் தண்ணீர்க் குடம் கீழே விழுந்து உடைந்தது. இந்த சத்தத்தால் பயந்து சிறுத்தை காட்டிற்குள் ஓடியது. இந்த சமாசாரம் கேட்ட ஜனங்கள் அந்தச் சிறுத்தையைக் கண்டு பிடித்துக் கொன்றார்கள்.

o o o

பூனா "லோகசங்கிரக பிரஸ்" என்ற அச்சுக் கூடத்தின் சொந்தக்காரரான ஸ்ரீசங்கர் இராமச்சந்திரர் என்பவர்மீது அவசர அச்சுச் சட்ட அமுல் பாணம் பாய்ந்தது. ஸ்ரீ. போபத்கார் எழுதிய "ஹிந்து ஸமாஜ தர்சன்" என்ற புத்தகத்தை வெளியிட்டதற்காக ஸ்ரீசங்கர் ஜாமீன் தொகையான ரூபாய் மூவாயிரம் பறிமுதல் செய்யப்பட்டது. இப்புத்தகம் வகுப்புகளுக்குள் துவேஷம் எழுப்பத்தக்க விஷயம் நிறைந்ததெனக் கூறப்படுகிறது.

o o o

சென்ற சனிக்கிழமை நன்னிலத்தில் தஞ்சைஜில்லா கள்ளுக்கடைக் குத்தாகைக்காரர் மகாநாடு நடந்தது. தேசியஇயக்கத்தில் கள்ளுக்கடைக் குத்தாகைக்காரர்களும் பங்கெடுத்துக்கொள்வதாகவும், மதுவிலக்கிற்காகத் தங்கள் பணத்தையெல்லாம் உபயோகிப்பதாகவும், தங்கள் வியாபாரத்தைக் குறைகூறுதிருக்க வேண்டுவதாகவும், இவ்விஷயமாகக் காங்கிரஸ்தலைவரிடம்தூது செல்லவேண்டு மென்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

o o o

டில்லி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் பொதுக் காரியதரிசியான ஸ்ரீ ஜுகல் கிஷோர் கன்னா என்பவரிடம் டில்லி அதிகாரிகளது இரகசியப்பதிவுப் புத்தக வெளியீடு ஒன்று கிடைத்திருக்கிறதாம். அதில் எழுதப்பட்டிருப்பதெல்லாம் நடவாத விஷயங்களாகவும், பொய்ச் செய்திகளாகவும் இருக்கின்றனவாம். சட்ட மறுப்பியக்கத்தின் போது ஸ்ரீ கன்னா ஒருமுறையே சிறை சென்றிருக்க அப்புத்தகத்தில் இருமுறை சிறைசென்றதாகக்குறிக்கப்பட்டிருக்கிறதாம்.

o o o

1937-ம் ஆண்டு ஏப்ரல்முதல் தேதியிலிருந்து இப்போது இந்தியா அரசாங்க நிர்வாகத்திலிருக்கும் அரசியல் இலாகாவே இராஜப்பிரதிநிதி நிர்வாகத்திற்கு மாறும். சமஸ்தானங்களுடன் ஏற்படும் சம்பந்தங்கள் இந்திய ஆட்சியினின்று விலகவேண்டு மென்பது புது இந்தியா சட்டக் கருத்து. ஆதலால் மன்னர்-சக்கரவர்த்தியின் சார்பில் அவரது பிரதிநிதி யாகிய இராஜப்பிரதிநிதி நேரே நிர்வாகம் நடத்துவார். மற்றப்படி அந்நிய இலாகா இந்தியா அரசாங்கத்துடன் சேரும்.

o o o

பஞ்சாப் மகா நாட்டில் விவசாயிகளின் துயரைத் தெரிவிக்கக்கூடியதாகப் பன்னிரண்டு தீர்மானங்கள்நிறைவேறின. புதுஅரசியல் சீர்திருத்தம் ஏழைகளின் உரிமைகளைப் பறிப்பதாகவிருப்பதால் அச் சீர்திருத்தத்தை உடைத் தெறியுமாறு காங்கிரசையும் காங்கிரஸ் அபேதவாதிகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பதவியேற்பதை இம்மகாநாடு கண்டிக்கிறது. வரப்போகிற உலக யுத்தத்தில் விவசாயிகள் கலந்து கொள்ளக் கூடாதென்பதும் நிறைவேறிய தீர்மானங்களில் ஒன்று.

o o o

பலதேச பிரிட்டிஷ் சமூகங்களும்ஒரு சங்கமாக ஐக்கியப்பட்டால் மாத்திரமே உலக அமைதி உறுதிப்படுமென்று ஆஸ்திரேலியா தேச டிப்டி பிரதம மந்திரியாகிய டாக்டர் எர்ல்பேஜ் ஓர் உபந்யாசத்தில் குறிப்பிட்டார். அவர், "பிரிட்டிஷ் சமூகங்களடங்கியசங்கம் தன்சாதனங்களைப் பலப்படுத்திக் கொண்டால் தனக்கு நியாயமென்று தோன்றுவதை பலவந்தமாகவும் நிலைக்கச் செய்ய முடியும். சென்ற நூற்றாண்டில் பிரிட்டன் தேசபலம் உலகத்தில் அமைதியைக் காத்ததுபோல் இந்த நூற்றாண்டில் மேலே சொல்லிய சங்கம் காக்கும்" என்று பேசினார்.

o o o

காலஞ் சென்ற ஸர். சுல்தான் அஹமத்கான் தர்மத்திற்காக ஒன்றரை லக்ஷ்ரூபாய் கொடுக்குமாறு தமது சாஸனத்தில் குறித்திருக்கிறார். இந்தப் பணம் பல சர்வகலாசாலைகளுக்கும் பள்ளிக்கூடங்களுக்கும் அளிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கலாசாலைக்கும் இவ்வளவு கொடுக்கவேண்டுமென சுல்தான் தமது சாஸனத்தில் குறித்திருக்கிறார். அலிகார் முஸ்லிம் சர்வகலாசாலைக்கு ஐம்பதினாயிரம் ரூபாயும், காசி ஹிந்துசர்வகலாசாலைக்கு இருபதினாயிரம் ரூபாயும், டில்லி சர்வகலாசாலைக்கு இருபதினாயிரம் ரூபாயும் அளிக்குமாறு அச்சாசனத்தில்கண்டிருக்கிறது.

o o o

லோனுருகாலா என்ற 70 வயதான ஒருவர் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினார். பக்கத்துக் கிராமமொன்றுக்குச் சென்று 400 ரூபாய் கொடுத்து ஒரு பெண்ணைக் கல்யாணஞ் செய்து கொண்டு ரயிலேறி ஊருக்குத் திரும்பினார். புதியகல்யாணப்பெண் ஸ்திரீகள் வண்டியில் ஏறினாள். அங்கிருந்த பெண்கள் எல்லாரும் புதுமணப் பெண்ணின் பேச்சுக் குரலிலிருந்து அவள் பெண்ணல்லவென்று கண்டு கொண்டனர். உடனே கூச்சலிடவே அதிகாரிகள் வந்தார்கள். தாம் ரூபாய் கொடுத்து மணந்துவந்த பெண், ஒரு பையன் என்று அறிந்த கிழவர் மிகவும் வருந்தினார்.

o o o

ஸர். எஸ். என். பொக்கண்ணவாலா லண்டன் செல்கிறார். இவர் 'ஸெண்டிரல் பாங்க் ஆப் இந்தியா'வின் நிர்வாக டைரக்டர். இந்திய மூலதனத்துடன் கூடிய பணமாற்று பாங்க் ஒன்று லண்டனில் ஏற்படுத்த இவர் செல்கிறார். அந்த பாங்கின் மூலதனம் 5 லட்சம் பவுன். மூன்று ஐரோப்பியர்களும் மூன்று இந்திய கனவான்களும் அந்த பாங்கின் டைரக்டர்களாக இருப்பார்கள். உலகத்தில் இந்திய வர்த்தகம் நடைபெறும் பெரிய நகரங்கள் எல்லாவற்றுடனும் இந்த பாங்கின் தொடர்பு இருக்கவேண்டு மென்பது இவர் எண்ணம். அடுத்த ஆகஸ்டு மாதம் இந்த பாங்கு வேலை தொடங்கும்.



## சமதர்மமே லட்சியம்

### திரு. சத்தியமூர்த்திக்குப் பதில்

திங்கட்கிழமை ஓங்கோல் தாலூகா இளைஞர் மகாநாடு நடைபெற்றது. அதற்குத்தலைமை வகிப்பதாக இருந்த ஸ்ரீமான். வி-வி-கிரி அவசரமாகத் திருப்பதி செல்லவேண்டி யிருந்தபடியால் இளைஞர்க்குச் சில புத்திமதிகள் கூறியபின் கூட்டத்தை விட்டுச் சென்றார். பின்னர் ஸ்ரீமான் மாதுரி அன்னபூர்ணயா மகாநாட்டிற்குத்தலைமை வகித்தார். அவர்பேசியதன்சாரம்வருமாறு:

"1930-ம் ஆண்டு பெரிய காங்கிரஸ் தலைவர் இளைஞர் இயக்கத்தை ஆதரித்தனர். இப்போது பண்டிதர் ஜவஹர்லால் நேரு, பாபு சுபாஷ் சந்திரபோஸ் முதலிய மிகச்சிலரே இதையாதரிக்கின்றனர். முன்பு காங்கிரஸைப் பின்பற்றி நின்ற இளைஞர்இப்போது சமதர்மக்கட்சியுடன் ஒன்றுபட்டுப் பண்டித ஜவஹர்லாலின் தலைமையில் இந்தியத் தேசிய காங்கிரஸையே சமதர்ம லட்சியத்தினிடம் இழுக்கமுயல்கிறார். தேசத்தில் சம தர்மத்தையும் சம தர்மிகளையும் எதிர்ப்பதற்காகச் சக்திகளும் சாதனங்களும் அணிவகுக்கப் படுகின்றன. பம்பாய் முதலாளிகளுக்கு இம்மாகாணத்தில் ஸ்ரீமான்கள் சத்தியமூர்த்தி, இராமதாஸ், இராமலிங்க ரெட்டி என்ற திரிமூர்த்திகள் அகப்பட்டனர். நம் மாகாணத் தவர்க்கு சமதர்மத்தில் ஹிம்ஸைக் கொள்கை தெரிகிறதாம்; இந்தியர்க்கு உபயோகமில்லையாம். பம்பாய் முதலாளிகள் 'இந்தப்பிரசாரம் எங்களால் எதிர்க்கப்படும்' என்கிறார்கள். கொள்கைகளை எதிர்ப்பதில் பொருளுண்டு; எங்கள் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதை எப்படி அவர்கள் எதிர்க்க முடியும்? மறைமுகமாக இவர்கள் அதிகாரவர்க்கத்தினரைத் தூண்டுகிறார்கள். ஸ்ரீமான் சத்தியமூர்த்தி இன்னும் அதிகம் தாண்டுகிறார்.

#### எச்சரிக்கை

ஆனமலை ஐரோப்பிய சங்கத்தில் பேசியபோது ஸ்ரீமான் சத்தியமூர்த்தி 'சமதர்மத்தில்ஹிம்ஸா வழியும்சேரும்' என்றார். இதனால் இவர் அதிகாரவர்க்கத்தவரை அழைத்து எங்களை நசுக்கச் சொல்கிறார் என்றே நாம் கருதமுடியும். எதிரிகளிடமிருந்து மாத்திரமேயன்றிப் போலிநண்பர்களிடமிருந்தும் எங்களைக் காத்துக்கொள்ள எங்களுக்குப் பூர்ண தைரியமுண்டு என்று ஸ்ரீமான் சத்தியமூர்த்திக்கும் அவரது நண்பர்களுக்கும் தெரிவிக்கிறேன். சமதர்மம் தன் லட்சியத்தை முடித்துக் கொள்ள ஹிம்சை வழி அநாவசியம். ஸ்ரீமான் சத்தியமூர்த்தியின் பழைய நிலைமைகளை யோசிக்கும்போது, அவர் சமதர்மத்தின் சாரத்தையறியாதவர் என்று என்னால் சொல்லமுடியாது. அவர் வழக்கம் போல் கூட்டத்திலுள்ளவருடன் ஒன்றென்று தெரிவித்துக்கொள்ளமேடைக்கேற்ற வேஷம்போட்டார். பிறகு ஸ்ரீமான்சத்தியமூர்த்தி வெளியிட்ட சமாதானமும் அழகாயில்லை; தும்பை விட்டு வாலைப் பிடித்திழுப்பது போலிருக்கிறது. 'சமதர்ம லட்சியம் கைகூடுவதற்கு ஹிம்சை வழியும் தேவை' என்று அவர் கூறியதை அச்சமாதானம் மாற்றவில்லை. ஒன்ற அவர்தாம் சொல்லியவார்த்தைகளைத் திரும்பவாங்கிக்கொண்டு தாராளமாக மன்னிப்பு கேட்கவேண்டும்; அல்லது தைரியமாக அம்மொழிகளைத் தாங்கிநிற்கவேண்டும். அவர்மந்திரியாகவந்தால் யாதுசெய்வார் என்பதற்கு இப்போதே அடையாளம் காட்டுகிறார் போலும்! அதற்காக நாம் அவருக்கு நன்றி பாராட்டுவோம். நமக்கு வரும் நிலைமைகளையறிந்துநாம்தீயில் குதிக்கவும் தயாராயிருக்கவேண்டும்."

பிறகுமகாத்மா காந்தியின் அரிய தொண்டுகளைப் பற்றியும் உலகநிலையைப்பற்றியும் விரிவாகப் பேசினார். பண்டித ஜவஹர்லாலுக்குப் பிறகு காங்கிரஸ் தலைமை வகிக்க பாபு சுபாஷ் சந்திரபோஸே தகுதியுள்ளவர் என்றார்.

## அதிகாரம் யாருக்கு?

### நகர சபைக்கா? போலீசுக்கா?

செங்கல்பட்டு ஜில்லா மாஜிஸ்டிரேட் ஸ்ரீ பிரிச்சார்டு ஐ. சி. எஸ். முன்னிலையில் ஒரு ரசமான வழக்கு விசாரணைக்கு வந்தது. அது வருமாறு:—

செங்கல்பட்டு நகரசபையார் சில இடங்களைக் குறிப்பிட்டு, அந்த இடங்களில்தான் பஸ்காரர்கள் பஸ்ஸை நிறுத்த வேண்டுமென்று திட்டம்செய்திருந்தனர். இந்தத் தங்குமிடங்களுக்கு வாடகை கொடுக்கவேண்டும். செங்கல்பட்டு போலீஸ்சூப்பிரன்டெண்டெண்டு நகரில் செல்லும் பஸ்களைத் தங்குமிடங்களுக்குப் பதிலாகச் சாலை ஓரங்களில் நிறுத்திப் பிரயாணிகளை ஏற்றிக் கொள்ள அனுமதி யளித்தார்.

செங்கல்பட்டு நகரசபைத் தலைவர் போலீஸ் சூப்பிரன்டெண்டின் உத்திரவைஎதிர்த்து இந்த உத்திரவு பஸ் தங்குமிடத்துக் கண்டிராக்டர்களை நஷ்டப்படுத்துகிறதென்றும், நகரசபைச் சட்டம் 270'ஸி'பிரிவுப்படி போலீசார் நகரசபையார் பிறப்பித்த உத்திரவுக்குப் பாதகம் விளைக்கக் கூடாதென்றும் ஜில்லா மாஜிஸ்டிரேட் முன்பு வழக்குத் தொடுத்தார்.

ஜில்லா மாஜிஸ்டிரேட் தமது தீர்ப்பில் "நகரசபையார் குறிப்பிடும் 'தங்குமிடங்களில்' தவிர மற்ற இடங்களிலும் பஸ்களை நிறுத்திப் பிரயாணிகளை ஏற்றிக்கொள்ளவும் இறக்கிவிடவும் போலீஸார் இடம் கொடுக்கலாம். போக்குவரவை ஒழுங்குசெய்யும் அதிகாரம் போலீசாருடையது; நகர சபையாருடையதன்று" என்று குறிப்பிட்டார்.

## வகுப்புத் தீர்ப்பைப்பற்றி நேரு

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் செய்த வகுப்புத் தீர்ப்பைப் பற்றிப் பண்டித ஜவஹர்லால் நேரு கொண்டுள்ள கருத்தை விளக்குவதற்காகப் பண்டிதர் வெளியிட்ட ஓர் அறிக்கையில் பின்வரும் கருத்தும் அடங்கியிருக்கிறது:-

"முக்கிய பிரச்னைகளில் நான் நடுநிலை வகிப்பதே கிடையாது. இத்தகாத தீர்ப்பை எப்படி நீக்குவது? இதுவே கேள்வி. இதற்கு இரண்டு வழிகளே யுள. பூர்ண சுயராஜ்ய மடைந்தால் இந்த ஏற்பாடுகள் தாமே நீங்கிவிடும்; ஜனநாயக கொள்கையே ஆதிக்கம் செலுத்தும். இதனால் பாதிக்கப்படும் பல சமூகங்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டுச் சமாதானமாகப் போதல் மற்றொரு முறை. இதில் நான் சொல்லக்கூடியதொன்று உண்டு. பூர்ண சுயராஜ்யம் விரும்புகிறவர்களும் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய சாயையில் நிற்க விரும்புவோரும் உண்மையான ராஜி எதுவும் செய்து கொள்ள முடியாது. வழிகளில் இவர்கள் முரண்பட்டவர்கள். இவ்விஷயத்தில் பிரிட்டிஷாரை நாம் சகாயம் செய்ய அழைப்பது முடியாத காரியம். சகாயம் செய்யாமலிருப்பதே அவர்களுக்கு லாபமாகும். ஆதலால் ஜன சமூகத்தின் கவனத்தைத் தேசீயத்திலும் பொருள் நிலை நெருக்கடியிலும் இழுப்பதே பரிகாரம். இவற்றால் ஜனங்கள் உண்மையை உணர்ந்து வகுப்புப் பிரச்னையின் ரகஸ்யத்தையறிவார்கள். அப்படிச் செய்வதற்குப் பதில் வகுப்புத்தீர்ப்பைப் பற்றியே அழுத்தி வாதித்து வந்தால் வகுப்புப் பிரச்னை முடிவுபெறுதல் தடைப்பட்டுவரும். ஏனெனில் ஜனங்கள் மற்றவிஷயங்களில் கருத்துச் செலுத்தமுடியாதவராகிறார்கள்.

காங்கிரஸின் நிலைமையில் சந்தேகமே யில்லை. தேசியசம்பந்தத்துடனும் ஜனநாயககொள்கையுடனும் முடிவு ஏற்பட வேண்டும். ஆயினும் பலவகுப்புகளுக்குள்ளும் மத்தியஸ்தம் முடிவடைந்தால் அதையும் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளும்.

## ஆவலா? ஆசையா?

### மகாத்மா கடிதம்

ஸ்ரீ ஹரிலால் காந்தி, ஜனுப் அப்துல்லா காந்தியானது பற்றி மகாத்மா காந்தி 'எனது முஸ்லிம் நேயர்களுக்கு' என்று தலைப்பிட்டுக் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்:—சுமார் பதினைந்து நாட்களுக்கு முன்பு எனது மூத்த மகனும், இப்போது ஐம்பது வயது நிரம்பப் பெற்றவனுமான ஹரிலால், இஸ்லாம் மதத்தைத் தழுவியதாகப் பத்திரிகைகள் கூறுகின்றன.

மேமாதம் 29-ந்தேதி ஹரிலால், பம்பாய் ஜும்மா மசூதியில் ஒரு பெருங்கூட்டத்திடையே தன் மதமாற்றத்தை யறிவிக்க அனுமதிக்கப் பட்டானும், கரகோஷங்களுக்கிடையே அவன் பேசி முடித்தபோது ஜனங்கள் அவனுடன் கைகுலுக்கச் சென்றார்களாம். உலக ஆசையின்றி உண்மையான ஆவலினால் அவன் மதம் மாறியிருந்தால் எனக்கு ஆட்சேபமில்லை.

என் மதத்தைப்போலவே இஸ்லாம் மதமும் உண்மையானதென்பது என்னுடைய கருத்து. சுயநல மின்றியாவது உண்மை ஆர்வத்துடனாவது ஹரிலால் மதம் மாறியிருப்பானா என்பது எனக்குச் சந்தேகமாகவிருக்கிறது."

## கைத்தொழிற் சங்கத்தின் பிறப்பு

### ஸ்ரீ குமரப்பா பேச்சு

சென்ற சனிக்கிழமை ஸ்ரீ. ஜே. ஸி. குமரப்பா, மைசூர் சுதேசிப் பொருட்காட்சியில் ஒரு பிரசங்கம் செய்தார். அதன் சாரம் வருமாறு:—

"இந்தியாவில் முன் காலத்தில் விவசாயத்துடன் வேறுபல கைத் தொழில்களும் சிறந்திருந்தன. அந்தத் தொழில்களுக்கு மூலப்பொருள்கள் உள்ளூரிலேயே கிடைத்து வந்தன. இந்தக் கைத்தொழில்களால் ஏராளமான மக்களுக்கு வேலையிருந்தது. இப்பொழுதோ நாம் இத் தொழில்களை அலட்சியம் செய்துவிட்டதாலேயே வேலையின்றித் திண்டாடுகிறோம். இந்த வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க மேனாட்டு முறையில் வகுக்கப்படும் எந்தத் திட்டமும் பரிகாரமாகாது.

இயந்திர சாதனங்களின் மூலம் பெரியதொழில்கள் ஆரம்பிக்கப்படவே தொழிலாளர்பாடு திண்டாட்டமாகி விட்டது. இந்த நாளில் ஜனங்கள் தாங்களேசெய்து கொள்ளக்கூடிய பொருள்களை யெல்லாம் அந்நியரிட மிருந்தே வாங்குகிறார்கள். இதனால் நமது பணம் அந்நியருக்கே போகிறது.

யந்திர சாதனங்கள் இவ்வளவு தூரம் பெருகினாலும் கைத்தொழில்கள் அழியவில்லை. இக்கைத்தொழில்களுக்கு நவீனமுறையில் ஒருவழிகாட்டவே அகில இந்திய கைத்தொழிற் சங்கம் ஏற்பட்டிருக்கிறது."

## காங்கிரஸில் பிளவு

### பலங்கொடுக்க உதவும்

லாகூரில் பத்திரிகை நிரூபர்கள் பண்டித நேருவுக்கு அளித்த விருந்தில் பண்டிதர் சிலவிஷயங்களைக் குறித்துப் பேசினார். சமதர்மம் பேசுவதாலும் பிரசாரம் செய்வதாலும் காங்கிரஸில் பிளவு ஏற்படுமென்ற ஆட்சேபத்துக்கு ஸ்ரீ ஜவஹர் பதிலளித்தார். 1918-ம் ஆண்டு காங்கிரஸில் பிளவு ஏற்பட்டபோது மகாத்மாகாந்தி உள்ளே நுழைந்தாரென்றும் அதனால் காங்கிரஸில் மேல் வகுப்பினர்க்கு இருந்த ஆதிக்கம் போய் மத்திய வகுப்பினர் ஆதிக்கம் பெற்றனரென்றும் பண்டிதர் எடுத்துக் காட்டினார். அதுபோல் காங்கிரஸில் ஏற்படக்கூடிய பிளவின் பயனாக இப்போது காங்கிரஸைப் பாமர ஜனங்களிடம் நெருங்குமாறு நாம் செய்தோமானால் அதற்குப் பலமேற்படுமென்பது ஸ்ரீநேருவின் கருத்து. அவா, ஜனசமூகத்தின்பெரும்பாலாராயிருப்பவர்களே காங்கிரஸுக்கு அடிப்படையா யிருக்க வேண்டும்" என்கிறார்; 'பிளவு ஏற்படுவதால் நூற்றுக்கு இருவர் நஷ்டமானால் ஆகலாம்; அதற்குப்பதில் பொதுஜனங்களில் நூற்றுக்கு 80பேர் அதிகம் சேருவர்' என்கிறார்.

முஸ்லிம்களிடம் நம்பிக்கை கொண்டமொழிகளாகப் பண்டிதநேரு பேசிய தன் சாரம் வருமாறு:—

"பொருள் நிலையைப் பற்றிய திட்டத்துடன் முஸ்லிம்களிடம் சென்று வகுப்புப் பிரச்னையில் எதுவும் பயனில்லை யென்பதை அவர்கள் அறியச் செய்வேன். இதனால் முஸ்லிம்கள் காங்கரசில் சேருவார்கள் என்பது என் நம்பிக்கை. ஹிந்து சமூகத்திலடங்கிய சாமான்ய ஜனங்களைவிட்அதிக விரைவில் முஸ்லிம்கள் சமதர்மத்தை அங்கீகரிக்ககூடும் என்று எனக்குத் தோன்றுகிறது."

ஆக்ரா ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ கிருஷ்ணானந்த கிருஷ்ணஸ்வாமி என்பவர் இந்திய மந்திரிக்கு ஒரு கடிதம் எழுதுவாரெனத் தெரிகிறது. ஸ்தல போலீசார் சமீபத்தில் தம் வீட்டைச் சோதனையிட்டு எடுத்துச் சென்ற பல புத்தகங்களைத் திருப்பி யளிக்க வேண்டுமென்று கேட்பர். எம். ஆர். மாஸானி எழுதிய 'சோவியத் பிரகாசங்கள்' ஜெயப்பிரகாச நாராயண் எழுதிய 'அபேதவாதம் ஏன்?' ஆகியபுத்தகங்களில் ஐந்து பிரதிகளைப் போலீசார் எடுத்துச்சென்றனர். அப்புத்தகங்களை எடுக்கவேண்டியதன் காரணத்தைக்கூறுமாறுஜெயப்பிரகாச நாராயண் கேட்டபொழுது போலீசார் அப்புத்தகங்கள் பறிமுதல் செய்யப்பட்டவை யென்று கூறினர். ஆனால் அப்புத்தகங்கள் பறிமுதல்செய்யப்பட்டவை யென்பதற்கு ஆதாரமில்லை என்று ஸ்ரீ கிருஷ்ணானந்த கிருஷ்ணஸ்வாமி கூறுகிறார்.

---

## சண்முகசுந்தரம்

(திரு. ர. சாரங்கபாணி, எம். ஏ.)

### மூன்றும் அத்தியாயம்

#### உண்மை உணர்வு

இயற்கை எழிலை யோர்ந்து இன்பம் நுகரும் ஆற்றலற்றதற்காலத்தில் இயற்கையன்னை - இறைவனது மாண்பை, சமய குரவர்களுக்கு எளிதிலுணர்த்தி அந்தமில் பேரின்பத்தை நல்கிய இயற்கையன்னை-போற்றுவாரற்றுத் தச்சிற்கிடந்து துயருறுகின்றாள். இயற்கைத் தோற்றங்கள்-கண்களுக்கினிய, செவிக்கினிய, சிந்தைக்கினிய இயற்கைத்தோற்றங்கள்-செயற்கையால் இடிப்புண்டன. ஆறறிவினனுடைய இயற்கையோடியைந்த இயல்பும், இயந்திரம் போலும் இன்னடையில் செயற்கையாகவே மாறி வருவது கண்கூடு. இயற்கையுடன் இயைந்து நின்ற தொன்மை மிகுந்த ஆலயங்களும் செயற்கை வனப்புடன் இலங்குகின்றன. உதய இரவியின் சுடரொளியும், நீல விண்ணிடை ஊர்ந்து வரும் முழுமதியின் வனப்பும், ஆகாயத்திடை இரவில் ஒளிரும் எண்ணிறந்த விண்மீன்களின் காட்சியும், கொண்டல் தவழும் ஆகாயமளாவியமலைகளின் தோற்றமும், இசையுடன் ஓடி ஒளியும் அருவிகளின் ஆரவமும், பல நிற மலர்களுடன் பொலியும் இயற்கை எழிலும், இதுகாலை நோக்குந்தொறும் நோக்குந் தொறும் எத்தனை அகங்களில் இன்ப உணர்வை ஊட்டுகின்றன? மிகச் சிலர்க்கே யென மயங்காது கூறலாம். இயற்கையோடியைந்தவாழ்வு எங்குற்றது? இயற்கையன்னையைப் புறக்கணித்த நமக்கும் இறைவனோடியைந்த இன்பம் வருமோ? இறைவனியல்பை யெடுத்தோதும் இயற்கையை மறந்தோம். ஆண்டவனை அருகழைத்துக்காட்டும் இயற்கைக் கண்ணாடி உடைந்துவிட்டதுஎன்றே கூறலாம். ஆனால் அக்கண்ணாடியின் படத்தை எழுத்தால்வரைந்து அறிஞர்கள் நமக்கு வழங்கியுள்ளார்கள். அவர்களுடைய நூற்களை உணர்வுடன் படித்து இன்பப் பயனெய்தும் ஆற்றல் நமக்கிருக்கின்றதா? அவர்கள் நுகர்ந்த இன்பம் நாமும்பெற இறைவனுக்குச் சொன்மாலை தொடுத்தார்கள். தொடுத்த மாலைகள் இயற்கை மணமும், அன்பு ஒளியும் கொண்டு இலங்குகின்றன. ஆண்டவனே! அவைகளை உய்த்துணரும் ஆற்றலும் அருகிவிட்டதே. எங்கும் புறவேடமாகவே பொலிகின்றது. புறத்தோற்றம் குன்றியின் செவ்வண்ணமெனத் திகழ்கின்றது. ஆனால், அகம், குன்றியின் நுனி விளங்கும் இருட்டென இருண்டு நிற்கின்றதே! ஆண்டவனருள் பெற அகத்தூய்மை வேண்டுமென மெய்யுணர் வுடையார் கூறிப்போந்தனர். அன்னையைமறந்தவர்களுக்கும், தாயைத் தச்சில் விடுத்தவர்களுக்கும் அகத்தூய்மை வருமோ? அறிவிலியே! இயற்கையைப் பணிந்து போற்று - உலகிடை உறையும் - மாறுபடும் சமயங்களையெல்லாம் இயற்கையன்னையே பாலூட்டி வளர்த்தாள்; ஆனால் செயற்கையோ அவைகளைச் சிறையிலிட்டு வாட்டுகின்றது. என்னே கொடுமை!

காலை ஐந்தரைமணியிருக்கும். கருணையின் வடிவாம் கடல் நிறத்துடன் விண் நிறைந்திருந்தது. சில நிமிடங்களில் அத்தோற்றம் சிறிது சிறிதாய் மங்கியது. கிழக்கில் தூயசிவப்பு வண்ணஞ் சுடர்விட்டெழுந்தது. கொண்டலினங்களும் செம்மை வண்ணந் தாங்கிப் பரந்தன. இரவியும் நெருப்புருண்டையெனக் கடலிடை நின்றெழுந்தான். யாண்டுஞ் சிதறி நின்ற இருள் மருண்டோடியது. அறிவு மயமாம் ஆண்டவன், ஒளியாயும் ஒலியாயுமன்றோ விளங்குகின்றானென மறைகள் ஒலமிடுகின்றன. அறிவின் இயல்பாம் ஒளியைக் கண்டதும், அஞ்ஞான விருள் அழிந்தொழியாது மற்றென் செய்யும்!

"சண்முக சுந்தரப் பிரபுவே!........"

"என்ன டாக்டரே?"

"நேற்றிரவு ஈண்டு நீர் அழைத்து வந்த பெண்ணணங்கு எங்கே?"

"என்ன!..........அந்த அறைக்குள் இல்லையா?"

"இல்லை ஆனால்....அவள் மறைந்ததுடன் உம்முடைய மோட்டார் வண்டியுங் காணப்படவில்லை. பிரபுவே! இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கின்றதென்றே யான் எண்ணுகின்றேன். நீர் அவளுக்குச் சமயத்தி லாற்றிய உதவியின் பயன் என்ன பார்த்தீரா?"

"டாக்டரே! அவசரப் படாதீர். சிறிது ஆராய்ந்து பார்த்து விட்டுப் பிறகு யோசித்தலாகும். ஒன்றும் உணராது நாம் ஒரு முடிவுக்கு வரல் நன்றன்று."

அதுகாலை ஒருவன் நேராகச் சண்முகசுந்தரத்தினிடம் ஒரு கடிதம் அளித்தான். அதில்,

சைதாப்பேட்டை
6—6—36

என்னின்னுயிர்க் காதல!

உங்களுடைய உளக் குறிப்புணர்ந்த யான், உரிமையுடன் உங்களைக் 'காதல' வென வழைக்கவுந் துணிந்தேன். உத்தரவின்றி உங்களுடைய வண்டியை எடுத்துச் சென்றதற்காக மன்னியும். இக்கடிதம் நீர் பெறும்போதே வண்டியையும் பெற்றிருப்பது திண்ணம், எனதாருயிரனையாய்! நான் உங்களைக் கண்டதுங் காதல் கொண்டேன். எனினும், ஈண்டு வரைதற்கொணாப் பல காரணங்களால் நான் உங்களை மணத்தல் இயலாது. நான் பெண்ணாய்ப் பிறந்து நுகர்ந்த இப்புத்துணர்வு, என்றும் என் அகத்திருந்து இன்பமூட்டும். நான் மணம்புரிவதாயிருந்தால் உம்மையன்றி மற்றெவரையும் மணக்க விசையேன்; எனினும், நீர்என்னை மறந்துவேறொருத்தியை மணந்து இல்லறத்து நின்று இருமைப் பேறெய்த இறைவனை வேண்டுகின்றேன். என் கருத்துக் கிசைந்த கண்ணாளா! இவ்வுரிமை பாராட்டி உங்களை அழைக்க எனக்கு உரிமையில்லையெனினும், உங்களுடைய வாழ்க்கைத் துணையாகும் பெரும் பாக்கியம் யான் பெறவில்லை. யான் தற்காலம் இருக்கும் நிலையில் நான் இறத்தலே நன்றெனஎனக்குத் தோன்றுகின்றது. பிரபுவே! ஆம். நீர் என்னை யறியாவிடினும் நான் உங்களை யறிவேன்; உங்களை மணக்க வியலாத நிலையிலிருக்கும் நான் என்னுடைய பெயரை உங்களுக்குக் கூறிப் பயனென் என்றே கூறினேனில்லை. ஆ! உங்களை மணக்க இறைவனெனக்குப் பேரருள் புரியின், எவ்வளவு பேரின்பம் என்னுடையதாகும்! காதல! அக்காலமும் வருமோ? உங்களுடைய மனநிற்குவந்த முருகன் அருளிருக்குமேல் அவ்வாறு நிகழ்ந்திடினும் நிகழலாகும். என் அன்பே! என்னைப் பற்றி நீர் ஒரு சிறிதுங் கவலையுறுதீர். அவரவர் விதிப்பயன்களை அவரவரே அநுபவித்தல் வேண்டும். என்னுருயிரே! இறுதியாக உம்மையொன்று அடிபணிந்து வேண்டுகின்றேன். என்னை மறந்துவிடும். இக்கடிதத்தையும் கிழித்தெறிந்துவிடும்.

உமதின்னுயிர்க் காதலி,
சுசீலா.

ஆ! ஈசா! எனப் பெருமூச்செறிந்து ஒருமுறைக்கிருமுறை அக்கடிதத்தை வாசித்தான். அதனின்றும் அவனுக்கு மனக்கவலையே யதிகரித்தது. ஒரு பெண்ணணங்கு - மணமாகா ஒருத்தி - தன்னைக்காதலித்தும் மணக்கவியலாதெனக் கூறுவதன் காரண மென்னவாயிருக்கலாம் என்று யோசித்தான். அவனுக்கொன்றும் விளங்கவில்லை. காதல்மணந் தவழ்ந்து வீசும் அருமைப்பெயர்களால் அழைத்தெழுதிய அணங்கு, மணமின்றியே என் வாணாளைக் கழிப்பேன் என உறுதிகூறிய பெண்ணழகு, இறுதியில் தன்னை மறந்து வேறொருத்தியை மணந்து இன்புற வரைந்ததென்னென மனமுடைந்தான். 'ஆ! பேதாய்! என்னை நீ அறிந்தாயல்லை. தூய காதல் கொண்டு வாடும் நான் உன்னை மறப்பதெங்ஙனம்? மறந்து மணப்பதா? நின்னை மறக்கவும், நின்மீது யான் கொண்டுள்ள காதலை மறக்கவும் ஒல்லுமா? என் முழு உளத்துடன் உன்னையே காதலித்துத் தவிக்கும் யான் மற்றொருத்தியைக் காதலிக்கவுங் கூடுமோ?" என்று மௌனமாகப் பேசினன். கடிதங் கொண்டுவந்த தன்னிடமிருந்த ஆள் இருக்கிறானென நோக்கினன்.

"பிரபுவே! என்ன விஷயம், உங்களுடைய அழகிய ஞான ஒளி வீசும் முகம் இவ்வாறு மாறுபட்டிருக்கக் காரணமென்ன? அகத்தில் ஒரு கவலை உங்களை வாட்டிநிற்கின்றதென யானறிவேன்."

"டாக்டரே! இக்கடிதங்கொண்டுவந்த ஆள் எங்குற்றான்?"

"பிரபுவே! கடிதத்தை உங்களிடமளித்தவுடன் சென்றுவிட்டான்."

"என்னுடைய வண்டி இருக்கின்றதா?"

"என்ன பிரபுவே! உம்முடைய அறிவே சிறிது சிதறிவிட்டாற்போல் தோன்றுகின்றது. அதோ எதிரில் இருப்பது யாருடைய வண்டி?"

"ஆம். டாக்டரே! நான் கவனிக்கவில்லை."

"திடீரெனப் பெண் மயலில் சிக்கியவர்கள் தம்மையும் மறந்து தம் அறிவையு மிழந்து நிற்கின்ற நிலையில் எவ்வாறு இவைகளை யெல்லாம் கவனிக்க வொல்லும்?"

"டாக்டரே! யான் பெண் மயலில் சிக்கியிருப்பதுகேவலஇச்சையாலன்று. இறைமையோடியைந்த அன்பின் நெறி நாடும் தூய காதலால் நான் சிக்குண்டேன்."

"முன் பின் அறியாத ஒரு பெண் மீது இவ்வாறு திடீரென அறிவுடைய நீர் இச்சை கொளல் விந்தையாக விருக்கின்றது."

"டாக்டரே! உமக்கது விந்தைதான். காதலின் திறனை நீரறியீர்."

"பிரபுவே! அறிய நான் சிறிதும் விரும்புகின்றேனில்லை."

"இவ்வாறு கூறியவர்களுள் எண்ணிறந்தோர் காதல் வயப்பட்டு மயங்கி அடிமைகளாகி விட்டிருக்கின்றார். சுவாமிநாதன் உங்களைப்போல் யானுங் கூறித்திரிந்தவனே. இதுகாலை என்னிலையைப் பாரும். பித்தன்போலும் பிதற்றித்திரிகின்றேன். அத்தகையஉணர்ச்சி, அநுபவம் ஆணுலகிலும் பெண்ணுலகிலும் ஒவ்வொருவருக்கும் வாராமற்போகாது. பழுத்த ஓலையை நோக்கிக் குருத்தோலை சிரிப்பதைப்போல் உம்முடைய வாய்மொழி இருக்கின்றது."

"பிரபுவே! உம்மையும், உம்முடைய தற்கால நிலையை நோக்கவும், உம்முடைய மொழிகளைக் கேட்கவும் என் மனம் வாடுகின்றது. பிறர்க்கு அறிவுறுத்திய நீர் இவ்வாறு இடறிவிழக் காரணமென்? ஊழ்வினையா, இன்றேல்..........."

"பித்தேறிவிட்டதாவெனக்கேட்கின்றீர்கள்போலிருக்கிறது. ஆம். என் மனதுக்குகந்த ஒரு பெண்ணணங்கை என் மனம் நாடுகின்றது. அவளை யான் மணத்தல் வேண்டும். இன்றேல் மணமின்றியே நாளைக் கழிப்பேன். இது உண்மை."

"பிரபுவே! அவசரப்படாதீர்கள். வெளித் தோற்றத்தைக் கண்டு காதல் கொண்ட நீர் தாமதமாக அவள் யார், எக்குலத்தைச் சேர்ந்தவள், எங்குறைபவள், இன்றிரவு இங்குத் தனித்துவரக் காரணமென், இடையில் முரடர் இவளைச்சிறைகொள்ள முயன்றதென், இன்றிரவை இங்குக் கழித்ததுடன் இன்று காலையில் சொல்லாமல் உம்முடைய வண்டியை யெடுத்து எங்குச் சென்றாள், அவள், தான் உறையும் இடத்தை மறைத்தற்குக் காரணமென்? பிரபுவே! எனக்கு எல்லாம் பெரும் விந்தையாகவே இருக்கின்றன. பிறப்பு வேற்றுமையுந் தொழில் வேற்றுமையும் நமக்கிருப்பினும், உம்மோடு நான் நெடுநாள் பழகவில்லையெனினும், எனக்கிருக்கும் உலகானுபவம் உங்களுக்கில்லை. ஆதலின் பதறுது இரும். அவள் யாரென்பதை யறிந்து, அவள், நீர் எண்ணுமாப்போல் உயர்குலத்துதித்த ஓர் உத்தமியாயிருப்பின், என்ன தடையிருப்பினும் அவைகளை உடைத்தெறிந்து மணம்புரியும். இன்றேல் வீணுகமனக்கவலையுற்று இருத்தல் நன்றன்றே?"

"டாக்டரே! உண்மையை யுணராது நீர் உரைக்கிறீர்"

"உமக்குப் பித்து-பெண் பித்தேறி விட்டது! நான் என் செய்வேன்?"

"டாக்டரே! ஆண்டவன் மாட்டுப் பித்தேறியவரே மெய்யுணர்வுபெறுவர். இல்லறப் பித்துடையவர் அன்பு நெறியையும், அடக்க முடைமையையும், உத்தம வாழ்க்கைத் துணையுடன் அருள் நெறியையும் ஓம்பி இறுதியில் பிறவாப் பேறெய்துவர்."

"நீர் கூறுவதொன்றும் எனக்கு விளங்கவில்லை."

"காதற்றிறன் உணரா உமக்கு ஒன்றும் விளங்காது. இயற்கைமருமம் இல்லறந் துறந்து பொறுப்பிகழ்ந்து சுயநலத்தை நாடும் மக்கள் இவ்வுண்மையை யோர வியலாது. காதல் என்பது ஒரு பித்தம் என முடிவு கட்டிக் கூறிப் பயனென்?"

"நாமிருவரும் பேசிப்பயனென்? நீர் என்னைப் பித்தனெனினும் அறிவிலியெனினு மொன்றே. கடவுளறிய நான் அவளைக் கண்டதும் காதல் கொண்டேன். அவளும் என் மீது காதல் கொண்டுள்ளாள் என்பதும் உணர்வேன். அதை எண்ண என்மனம் மகிழுகின்றது. ஆனால் இடையில் ஒருதடங்கலிருப்பதுபோலும் எனக்குத் தோன்றுகின்றது. அதை யாராய்ந்து அதைத் தகர்த்தெறிந்து விடுவேனேல், அவள் என்னை மணப்பதுதிண்ணம். என் ஆறுமுக வப்பா! இம்மை இன்பத்திற்கும் மறுமைப் பயனுக்கும் எனக்கு உதவியாற்றும் ஐயா! இன்று என் அகத்துறையுங் கவலையைப் போக்கி நானும் சுசீலையும் மனமுவந்து மணந்து இல்லறத்து நின்று இன்புற அருளீயும்."

"பிரபுவே!....நீர் இல்லறத்திருந்து இல்வாழ்வானது கடனை இனிதாற்றுதலைக் காண என் அக மகிழும். என்றும் உம்மோடொத்த கல்வியும் குலமும் பண்பும் உடைய ஒருத்தியை மணத்தல் நீத்து, திடீரெனக் கண்ட ஒருத்திமாட்டு இவ்வளவு பேரன்பு வைத்தல் முறையன்று. நான் உம்மைவிட வயதில் பெரியவன்; உலக ஞானம் உம்மைவிடச் சிறிது அதிகமுடையவன். ஆதலின் உம்முடையபின் நன்மையைக் கருதியே இவைகளைக் கூறுகின்றேன்."

"டாக்டரே! என் மீது உமக்குள்ள அன்பு இத்தகையதென்பதையானுணர்வேன். உமக்கு மிகவும் வந்தனம். மணியுமாகிறது. நான் சென்றுவருகின்றேன்."

என்று கூறி விட்டுச் சண்முக சுந்தரன் தன் வண்டியேறி தனில்லம் நோக்கி வேகமாகச்சென்றான். வழியில் சுசீலையைப் பற்றிய எண்ணங்களே அவனுக்கு அடிக்கடி எழுந்து ஒருவகையில் இன்பத்தையும் ஒரு வகையில் துன்பத்தையும் அளித்து நின்றன.

---

கௌடிய மடத்தைச் சேர்ந்த சுவாமி பான் என்பவர் லண்டனில் விஷ்ணு கோயில் ஒன்று நிருமாணிக்கத் திட்டம் செய்திருக்கிறார். இதற்கு இங்கிலாந்து சர்ச்சு ஆதரவளித்திருக்கிறது. காண்டர்பரி அர்ச்பிஷப் இங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டுபண்ணக்கூடிய விஷயங்களில் உழைக்கத் தமக்கு விருப்பம் இருப்பதாக அறிவித் திருக்கிறார். லண்டன் லார்டு பிஷப்பும் தம்மாலான உதவிபுரிவதாக வாக்களித்திருக்கிறார். திரிபுரா மகாராஜா கோயில் கட்டுவதற்கு ஏற்படும் செலவினத்தாம் ஏற்றுக் கொள்ளச் சம்மதித்திருக்கிறார்.





காவிய நிருத்தக் கலைகளின் தோற்றம்

ஆதியில் மக்கள், மனித முயற்சி இன்றி வளர்ந்துவந்த தாவரப் பொருள்களையும், சிறு சிறு விலங்குகளையும், பறவைகளையும் புசித்து உயிர் வாழ்ந்து வந்தார்கள். மக்கள் தொகை பெருகிய பொழுது இயற்கை விளைவு அவர்கட்குப் போதாமற் போயிற்று. அதனால், அவர்கள் நிலத்தைத் தோண்டிப் பண்செய்து, புல்லரிசிகளையும் தானியங்களையும் பயிரிடத் தொடங்கினார்கள். அவர்கள் உழைப்பால் அவைகள் பெரும் பயன் அளிக்கலாயின. ஆண்டுகள் செல்லச் செல்ல மக்கள் பயிர் முதலியவைகளை இடும் முறையினை நன்கு உணர்ந்தார்கள். மக்கள் தொண்டினைப் பெற்ற தாவரங்களும், நன்றி மறவா நல்லோர் போன்று, அவர்கள் மனம் உவக்கும் விதம் பெரும்பயன் அளித்து வந்தன. தங்கள் உழைப்பால் உயர்ந்து நின்று பூத்தும் காய்த்தும் காட்சி தந்த அப்பொருள்களைக்கண்டுமனமகிழ்ந்து அவர்கள் அவைகளைத் தெய்வமெனப் பாடிப் புகழ்ந்தார்கள். ஆனந்த மேலீட்டால் ஆடவும் ஆடினார்கள். அப்பாடலும் ஆடலுமே நாளுக்கு நாள் வளர்ந்து காவியக் கலையும், நிருத்தக் கலையுமென முறையே மிளிரலாயின.

மக்கள் இயற்கையும் தற்காப்பு நியமமும்

உழைப்பிற்கு ஏற்றவாறு சில இடங்கள் மிகச் செழிப்புற்றும் சில இடங்கள் செழிப்பற்றும் இருந்தன. செழிப்பற்றிருந்த இடங்களிலிருந்த மாந்தர் செழிப்புற்ற இடங்களைக் கைப்பற்ற முயன்றனர். அதனால் ஓர் ஊரினர், மற்றவர் தமக்குத் துன்பம் செய்யாவாறு அரண்பல வகுக்க வேண்டியவராயினர். நான்கு பேர் சேர்ந்தால் கருத்து வேற்றுமையும் வழக்குகளும் ஏற்படுமாதலால் அவைகளைத் தீர்த்து வைப்பதற்கு உரிய சபையும் காவலும் தொடரலாயின. உழைப் பில்லாத காலங்களில் மக்கள் மனம் நன்னெறி விட்டு விலகாவண்ணம் உலகமாகிய இப்பாடசாலையில் தாம் கற்றனவற்றையும், மக்கட்குப் பயன் தருவனவற்றையும் சேர்த்துச் சான்றோர் நூல்பல இயற்றினர். மக்கள் தொடக்கத்திலிருந்து நாகரிக வாழ்வை எய்தியவரையிலும் நாம் சுருக்கமாகக் கண்டோம். இது நிற்க.

கல்வி என்பதன் பொருளும் கல்விப் பயனும்

கல் என்னும் வினைப்பகுதியிலிருந்தே கல்வி, கற்பு, கற்றல் என்னும் பதங்கள் தோன்றின. இம்மூன்றற்கும் பொதுவாகப் பொருள் ஒன்றே. கல் என்னும் பகுதி தோண்டு, கிண்டு என்னும் பொருள் பெறும். ஆதலின், கல்வி என்பதற்குத் தோண்டுதல் என்பது பொருள். இச்சொல் மண்ணைத் தோண்டுதலை உணர்த்தும் பொழுது தொழிற்பெயர். பயிரின் விளைவிற்கு நிலம் பண்பெறுதல் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு அறிவின் விளைவிற்கு மனம் பண்ணுறல் முக்கியம். ஆதலின், மனம் பண்ணுறற்குக் கருவியாகிய ஆன்றோர் காவியங்களைப் பயிலுதலையும் முன்னையோர் கல்வி என வழங்கினர். அப்பொழுது அப்பதம் தொழிலாகு பெயராகும். மக்களுள் பெரும்பாலோர் உண்மை உணராது, கல்வி எனின் இலக்கியக் கல்வியையே கருதுவாராயினர். உண்ணும் உணவையும், அவசியமாக வேண்டுவனவற்றையும் கொடுக்க வல்ல தொழிற் கல்வியை அன்னார் கல்வியாகக் கருதிலர். இலக்கியக் கல்வி சிறந்ததாயினும், தொழிற் கல்வியோடு அளிக்கப்பட்டால்தான் அது மக்கட்கு வாழ்விற்கேற்ற பெரும் பயனை அளிக்கும்.

இந்நாள் கல்வி முறை

முன்னாள், இலக்கியக் கல்வியானது சில ஜாதியாருக்கும் செல்வந்தருக்குமே பயன் தருவதாய் இருந்தது. இரண்டொரு நூற்றாண்டுகளுக்குமுன் சில பெரியோர் மாந்தர் யாவருக்கும் இலக்கியக் கல்விகொடுக்கப்படல் வேண்டும் என்று முயன்றனர். அதன் பயனை அக்கல்வியின் பயனை மக்களுள் பலர் அனுபவிக்கலாயினர். தொடங்கியவர்களின் நோக்கம் மிகத் தூயதாயினும், அக்கல்வியால் உண்டான பயனிலும் துன்பமே அதிகம். இலக்கியக் கல்வியைக் கற்கத் தொடங்கிய மாணவரில் நூற்றுக்கு எண்பது பேர் ஏழையரே. பிள்ளைகளுக்காகத் தாய்தந்தையர் தம் நிலங்களை விற்கலாயினர். கல்வி முறையோ, ஆரம்பக் கல்வி, கலாசாலைக் கல்வி, கல்லூரிக் கல்வி, ஆராய்ச்சிக் கழகக் கல்வி என நான்காக வகுக்கப் பெற்றது. ஆரம்பக் கல்வி, கலாசாலைக் கல்விக்குத் துணை செய்வதாயும், கலாசாலைக் கல்வி கல்லூரிக்கல்விக்குத் துணை செய்வதாயும், கல்லூரிக் கல்வி ஆராய்ச்சிக் கழகக்கல்விக்குத் துணைசெய்வதாயும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. ஆரம்பக்கல்வி கற்கும் மாணவரில் நூற்றுக்கு ஐம்பதுபேர் கூடக்கலாசாலைக்கல்வியை நாடுவதில்லை. கலாசாலைக்கல்வியை நாடிய மாணவருள் நூற்றுக்குப் பத்துப் பேர்கூடக் கல்லூரிக் கல்வியை நாடுவதில்லை. கல்லூரிக் கல்வியை நாடியவருள் நூற்றுக்கு ஒருவர் கூட ஆராய்ச்சிக் கழகக் கல்விக்கு முயல்வதில்லை. இந்நிலையில் கல்வி முறை வகுக்கப் பெற்றதனால் ஆரம்பக் கல்வியை நாடிய மாணவர்கள் அக்கல்வியில் தேறுவதற்குள் சுமார் பதின்மூன்று அல்லது பதினான்கு வயது அடைகின்றார்கள். இவர்களுள் கலாசாலைக் கல்வியைப் பெறாமல் நின்று விடுபவர்களுக்குப் போதியவளவு கல்வி இல்லாமையோடு யாதொரு தொழிலுந்தெரியாது. அதனால் இவர்களுக்கு வேலை கிடைப்பதில்லை. எனினும், இவர்கள் பதின்மூன்றோ பதினான்கோ வயதுள்ள சிறுவர்களாதலின் இவர்களுள் பெரும்பாலோர் விளைநிலங்களுக்கோ, தொழிற் சாலைகளுக்கோ சென்று பிழைக்கத் தலைப்படுகின்றனர். ஆனால் கலாசாலைக்குச் சென்று கல்லூரிக்குச் செல்லாது நின்றுவிடும் மாணவர்களின் நிலைமிகவும் பரிதாப நிலையே. அவர்களுக்கு வயது குறைந்தது பதினேழு அல்லது பதினெட்டு நிரம்பிவிடுகின்றது. இந்நிலையில் அவர்களுக்கு ஒருவகையாக எழுதப் படிக்கத் தெரியுமே தவிர, வேறு ஒரு வேலையும் தெரியாது. அவர்கள் உத்தியோக ஸ்தலங்களில் எழுத்து வேலைக்குத் தகுதியுடையவர்களே அல்லாமல், வேறு எதற்கும் தகுதியுடையவர்களாகமாட்டார்கள். அவர்களுக்காகச் செலவிட்ட பணமோ, சொல்லும் அளவினதன்று. சில தாய் தந்தையர் தம் செல்வத்தைத் தம் மக்களைப் பற்றாக எண்ணிச் செலவிட்டிருப்பர். அவர்களுள் பெரும்பகுதியினர்க்கு எங்குப் போனாலும் வேலை கிடைப்பதில்லை. ஆரம்பக்கல்வி கற்றவரோ கவுரவம் பாராது தொழிற் சாலைகளுக்குச் சென்று, கைத்தொழில்கற்றுப் பிழைக்கின்றனர். இவர்களுக்குத் தொழில் செய்வது அவமானமான காரியமாகக் காணப்படுகின்றது. இவர்கள் 'வேலை இல்லை! வேலையில்லை!' என்று சொல்லிக்கொள்வதில் கவுரவம் காண்கின்றார்கள். பாவம்! பெற்றோரும் தம் பிள்ளைகள் நிலையைக் கண்டு வருந்துகின்றனர். கலாசாலைக்கு இவர்களை இவ்விதக் கல்விக்கு அனுப்பாமல் இருந்திருப்பின் பட்டினிக்கும் வருத்தத்திற்கும் வழி இல்லாமல் இருந்திருக்கும். கல்லூரி மாணவர்களைப் பற்றிச் சொல்லவே வேண்டுவதில்லை! கல்லூரியிலிருந்து தேறிய மாணவரில் நூற்றுக்கு ஐம்பது பேருக்கு வேலை கிடையாது. இக்கல்வியால் பெற்ற பயன் இதுவே. பள்ளிச்சாலைகளை அமைத்த காலத்திலிருந்த பெரியோர்கள் இலக்கியக் கல்வியே மற்றக் கல்விகளைக் காட்டிலும் மிகச்சிறந்ததெனக்கொண்டு, அதற்கே அரண் செய்யலானார்கள். அவர்கள் அன்று செய்த பிழையால், நம்மக்கள் இன்று பட்டினி கிடந்து வாடுகின்றார்கள்.

## கல்வியைப்பற்றிய சில கருத்துக்கள்

### முற்கால - தற்கால நிலை

:o:

தொழிற் கல்வியின் அவசியம்

[திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார்]

(உரிமை ஆக்கியோர்க்கே)

திருத்தமான கல்வி முறை

ஆதலின், நம் கல்வி முறை பெரிதும் மாறல்வேண்டும். பிரைமரிப் பாடசாலையில் படிக்கும் மாணவர்களுக்குத் தாய் மொழியோடு ஆங்கிலமும் கணக்கும் சொல்லிக் கொடுக்கலாம். அப்பிள்ளைகள் நன்றாக விளையாடல்வேண்டும். பாடசாலையில் அவர்கள் பல மணி நேரம் இருத்தலாகாது. பறவைகளைக் கூண்டுகளில் அடைத்து வைப்பது போல அவர்களை அடைத்து வைத்தல் கூடாது. பின்னும் அவர்களை உபாத்தியாயினிமார் காவலில் வைப்பது பெரிதும் நலம்.

ஆறுவது வகுப்பிலிருந்து எட்டாவது வகுப்புவரையிற் படிக்கும் மாணவர்க்குச் சில மணி நேரம் கைத்தொழிலும் பல மணி நேரம் இலக்கியக் கல்வியும் கற்றுக்கொடுத்தல் வேண்டும். எல்லா மாணவர்களுக்கும் ஒரே விதமான வேலையைக் கற்றுக் கொடுப்பதில் பயனில்லை. எல்லா மாணவர்களும் ஒரே விதமான வேலையைக் கற்கவும் இயலாது. பயிர்த்தொழில், நெசவுத் தொழில், சிற்பம், சித்திரம், தச்சு வேலை, இயந்திரம் இயற்றல் முதலிய வேலைகளில் மாணவர்களைப் பழக்குதல் வேண்டும். மாணவர்கள் பிரியத்தை அனுசரித்தே ஆசிரியர்கள் அவர்களுக்கு வேலைகளைக் கற்றுக் கொடுத்தல் வேண்டும். நெசவுத் தொழிலில் பிரியமில்லாத ஒரு மாணவனுக்கு அத்தொழிலைக் கற்றுக் கொடுத்தால் அவன் அத்தொழிலைப் பிரியத்தோடு கற்கமாட்டான். பின்னும் அவன் அத்தொழிலில் சிறந்து விளங்கவுமாட்டான். பள்ளிக்கூடங்களில் தொழிற்சாலைகள் அமைப்பதானால் செலவு அதிகம் உண்டாகும் என்று சுலபமாக அதிகாரிகள் கூறி விடுவார்கள். ஆனால், பள்ளிச்சாலைக்குப் பக்கங்களிலுள்ள நிலங்களை வயல்களாக மாற்றிப் பயிரிடும் தொழிலை மாணவர்களுக்குக் கற்றுக் கொடுக்கலாம்: வியாபாரத்திற்குத்தான் விளை நிலம் பெரிதும் வேண்டும். கற்றற்கு ஏன்? பட்டினத்தில் உள்ள பாடசாலை மாணவர்களை அருகிலுள்ள தொழிற் சாலைகளுக்கு அனுப்பித் தொழிற் கல்வியை அவர்களுக்குப் புகட்டலாம். மனம் இருந்தால், வழி உண்டாகும். இந்த நிலையில் பள்ளிக்கூடங்களுக்கு அரசாங்கமும் உதவி செய்தல்வேண்டும். நான்காவது பாரத்திலிருந்து ஆறுவது பாரம்வரையில் படிக்கும் மாணவர்களுக்குப் பாதிநாள் வேலையும் பாதிநாள் படிப்பும் கற்றுக் கொடுத்தல்வேண்டும். பாதிநாள் கற்றுக் கொடுக்கப்படும் இலக்கியப் பாடமோ, கல்லூரிப் படிப்புக்குச் சிறிதளவு துணை செய்வதாகவே அமைதல் வேண்டும். இங்ஙனம் கலாசாலைப் படிப்பு அமையுமானால், கல்லூரிக்குச் செல்லா மாணவர், கலாசாலையில் தாம் கற்ற கைத் தொழிலைத் துணையாகக் கொண்டு, தாம் பிழைப்பதே யன்றித் தமக்கு அதுநாள் உதவி செய்து வந்த பெற்றோரையும் காப்பார். விளை நிலம் பெரிதும் உடையோர், தாம் கற்ற புதிய புதிய முறையில் பயிர் செய்து, பெரிதும் பயன் பெறுவர்; தாம் செய்யாவிடினும், ஆட்களை வைத்துக் கொண்டு தொழில் செய்தலில் விருப்பமுடையராய்க் காரியங்களைச் செய்வர். வேறு வேறான வேலைகளில் முயற்சியுடையராய் மாணவர் செல்வராயினும், தாம் கற்ற இலக்கியத்தால் மனம் கூர்மையடையப் பெற்றிருப்பராதலால் வேலையில்லாக் காலங்களில் புதிய புதிய நூல்களைப் படித்துச் சிறந்த அறிவுடையவராகவும் ஆவர்.

கல்லூரி மாணவர்க்கும் மேற்சொன்ன நன்மைகள் வாய்க்கும் என்பதில் ஐயமில்லை. நுண்ணிய நூல் பல கற்கும் பொழுதும் கல்லூரி மாணவர் தாம் கற்ற கைத்தொழில்களைத் தொடர்ந்து கொண்டே இருப்பாராதலின், அவர்க்கும் அவர்க்குரிய வேலை கிடைக்காத பொழுது கைத்தொழில் பயன்படும்.

ஆராய்ச்சிக் கழகத்தில் பயிலுபவரைப்பற்றிநாம் ஆராயவேண்டுவதில்லை. பெரும்பாலும் ஆராய்ச்சிக் கழகத்தில் பயிலுபவர் சிறிதளவோ பெரிதளவோ செல்வ முடையவராகவே இருப்பர்.

மாணவர் வெளியூர்களுக்குச் சென்று அரிய பலவற்றைக் கற்றுணரல் வேண்டும். அவர்கள் பள்ளிச் சாலையிலேயே காலம்கழித்தால் மிக்க அநுபவமுடையவராகார்.

மாணவர்க்குத் தேகப் பயிற்சி மிகவும் முக்கியமானது. முன்னை நாள் நம் முன்னோர் சிறுவர்களைச் சிலம்ப வித்தைகளிலும் மற்றும் உடல் வலியுறுதற்குரிய வித்தைகளிலும் பழக்கி வந்தனர். இந்நாட்களில் பெரியோர் மேனாட்டு விளையாட்டுக்களாகிய உதை பந்தாட்டம், சல்லடைப் பந்தாட்டம், குண்டு எறிதல் முதலிய விளையாட்டுக்களில் சிறுவர்களைப் பழக்கி வருகின்றனர். நம் இந்திய மாணவர்கள், நம் நாட்டுச் சிலம்ப வித்தைகளிலும் மேனாட்டுவிளையாட்டுக்களிலும் தேர்ச்சி பெறுதல் வேண்டும். நம் உடற்பயிற்சி வித்தைகளைப்பழகுதலால் உடலுக்குப் பலம் உண்டாகும். மேனாட்டு விளையாட்டுக்களைப் பழகுதலால் மனோற்சாகமும், மன ஒற்றுமையும், பலர் கூட்டுறவும், வெற்றி தோல்விகளில் மனம் செல்லாமையும் உண்டாகும். ஆதலின் மாணவர்கள் காலையில் நம் சிலம்ப வித்தைகளையும், மாலையில் மேனாட்டு விளையாட்டுக்களையும் பழகல்வேண்டும்.

ஆசிரியர் இலக்கணம்

ஆசிரியர்கள் பரந்த நோக்கமும், ஆழ்ந்த கல்வியும், மனத்திருப்தியும், மொழியுந்திறனும், அருளும் உடையவர்களாய் இருத்தல்வேண்டும். இந்நல்லியல்களைப் பெற்றில்லாதவர் ஆசிரியராய் இருத்தற்கு உரியவராகார் எனப் பெரியோர் கூறுவர். இவைகளையுடையவரே ஆசிரியராக இருத்தல் வேண்டுமென்று இந்நாளில் எண்ணலில் பயனில்லை. ஜனத்தொகை அதிகப்பட்டிருத்தலின் பல ஆசிரியர்கள் வேண்டும். எவினும் ஆசிரியரிடத்து எவை இருந்தாலும் இல்லாவிட்டாலும் பரந்த நோக்கமும், ஆழ்ந்த கல்வியும், மொழியும் ஆற்றலும் இருத்தல்வேண்டும். இவை இல்லையேல் அவரிடத்துப் படிக்கும் மாணவர் பயனடையார்.

ஆசிரியரும் தலைமையாசிரியரும் அதிகாரிகளும்

பல நல்லியல்புகளை ஆசிரியர்கள் பெற்றிருப்பினும், அவர்களை நடத்துகின்ற தலைமை ஆசிரியர்கள்நிலை சிறிது மாறியிருப்பின், பாடசாலைகளுக்கு அந்நல்லாசிரியர்களால் பயன்ஒன்றும் உண்டாகாது. தலைமை ஆசிரியர்கள், பள்ளி ஆசிரியர்களைத் தங்கள் எண்ணத்தை நடத்திவைக்கும் ஆட்களேஎனக் கருதுதல் கூடாது. தாம் நினைப்பன யாவும் சிறந்தன என்றும், மற்றவர் கருதுவன குறையுடையன என்றும் கருதுதல் எத்துணைத் தவறுதல்என்பதை ஆலோசித்துப் பார்ப்பார் காணல் இய

## பரிதியஞ் செல்வன்

### எழுச்சி

(திரு. தே. ப. பெருமாள்)

பொழுது புலர்ந்தது. இருளெல்லாம் யாண்டோ மறைந்தன. கீழ்த்திசையில் குன்றுகளின் பின்புறமிருந்து கதிரவன் எழுகிருன். அவனைச் சூழ்ந்து பெருத்த ஒளி. அவ்வொளி கண்களைத் தகைதல் செய்கிறது.

கதிரவன் ஒளி, உயர்ந்த மாடங்களில் படுகிறது; நீண்ட தெருக்களில் வீசுகிறது; வயல் நிலங்களில் காய்கிறது. ஐயோ! காடெல்லாம் அவ்வொளி! மரங்கள், செடிகள், கொடிகள், கான்யாறுகள் ஆதியன வெல்லாம் அவ்வொளியால் ஒளி பெறுகின்றன. அதோகாண்! அக்கானிடை மான்கள் அவ்வொளிக்கு அஞ்சிப்பதுங்குகின்றன. கரிகள் வளைகளிற்புகுகின்றன. முயல்கள் சருகுகளில் மறைகின்றன. இதுவென்ன? அஞ்சா நெஞ்சுடைய சிறுத்தையுமன்றே அவ்வொளிக்கு அஞ்சிப் பதுங்குகிறது!

கடல் நீரில் அவ்வொளி படுகிறது. எத்தகைய பெருத்த ஒளி! எங்குமில்லா ஒளியன்றோ அங்குச் சூழ்ந்துள்ளது? அவ்வொளியைக்கண்டு மகிழ்வன பன்னிறம்படிந்த புள்ளினங்கள். அவைகளின் சிறகுகளுமல்லவோ அவ்வொளியால் அழகு பெறுகின்றன. கடலிடைக் காணும் அழகினைக்கண்டு களித்த ஒரு புலவன்,

“ கடலின் மீது கதிர்களை வீசிக்
கடுகி வான்மிசை எறுதி யையா
படரும் வானொளி யின்பத்தைக் கண்டு
பாட்டுப் பாடி மகிழ்வன புட்கள்
உடல் பரந்த கடலுந் தனுள்ளே
ஒவ்வோர் நுண்டுளி யும்விழி யாகச்
சுடரு மின்றன் வடிவையுட் கொண்டே
சுருதி பாடிப் புகழ்கின்ற திங்கே.”

என்றபாட்டைப்பாடிமகிழ்வானுயினன்.

தாமரைத் தடாகத்திலே தாமரை மலர்கள் மலர்ந்தன. அல்லிச் சிறுமலர்கள் வாடிக்குவிந்தன. இவைகட்குப் பரிதியஞ் செல்வன் பகைவன் போலும்! மலர்ந்த தாமரை மலர்களில் ஒன்று இளந்தென்றலால் ஆடுகிறது. அது போழ்து அதன் மகரந்த மெல்லாம் காற்றில் பறந்தோடுகின்றன. வண்டு இதுகண்டுமதுமயக்கத்தால் செய்வதறியாது திகைக்கிறது. காலையெழுந்து உணவெடுத்தற்குக் கூட்டை விட்டு வெளிப்போந்த ஒரு வெண்பறவை ஆடும் அம்மலர்மிசை அமர்ந்தது. இப்பறவையைக்கண்டு அஞ்சியது ஒரு வெள்ளிக் கயல் மீன் கூட்டம். நீரின் மிசை நீந்திய அக்கூடம் நீரினுட்புகுந்தது. மலர்மீது அமர்ந்தபறவையோ அம்மலர்த் தொட்டிலில் ஆடிக்களிக்கிறது. எல்லையற்ற இன்பத்தால் அப்பறவை பாடுகிறது. அப் பாட்டு எத்துணை இனிமையுடையதாய் இருக்கிறது. எப் பாடகனுல் அவ்வாறு பாடுதல் இயலும்? அப்பாடல், இனிமையில் இன்பம் விளைவிப்பது; அன்பை ஓம்புவது; அழகை வளர்ப்பது. அப் பாடல் கடவுள்.

அப்பாடலில் தோய்ந்தான் ஒருவன். அவன் மெல்லிய மேனியன்; இன்னெழில் முகத்தான்; வெண்டுகிலுடையான்; கவலையற்றோன்; கடவுளைக்காணும் அவாவுடை ஏழை. அவன் புலவன்; அதிகாலையிலே ஆதித்தன் இளங்கதிர்பரப்பி எழும் அழகிலே உள்ளம் பதித்தும் அப்பாடலைக் கேட்டு மயங்கியும் பாட்டிசைப்பானுயினுன்.

ஆதித்தன் எழுந்ததையுமறியாது சில பெண்டிர் தங் கணவருடன் துயின்று கொண்டிருந்தார். அவரை வையத்துக் கூக்குரல் எழுப்பியது; எழுந்து கொண்டார். அது போழ்து அவரின் வேகமென்ன? எத்துணை விரைவாய்த் தம் மில்லத்தைப் பெருக்குகின்ருர். அம்மம்ம! அவ்விரைவு வரையுந் தன்மையதன்று. அவரின் வேகத்தில் முந்திய ஞான்று கூந்தலில் செருகிய மலர் கீழ் வீழ்ந்தது. கைகளிலணியப் பெற்ற சங்கு வளையல்கள் அடிபட்டு உடைந்து சிதறின. அவரின் ஆடையந்துகில் கோல் குத்திக் கிழிந்தது. இவ்விடையில் அவர்கள் வருந்திக் கூறும் மொழிகளில் குழவிகள் விழித்தன.

சிருர் எழுந்தனர். எழுந்த சிருர் முன்றில் போந்து விளையாடத் துவங்குகின்ருர். அதுபோழ்து ஆதித்தன் மிகக் கொடுமையாய்க் காய்கிருன். ஐயோ! அச்சிருரெல்லாம் அவ்வெய்ய சூடால் காய்கின்றனர். அன்பற்ற ஆதித்தனின் செய்கைப்போக்கு என்னே! என்னே! பின்னை ஞான்று அச்சிருர் அவ்வாதித்தன் தொண்டைப் புகழ்ந்து கூறும் கவிஞராகலாம்; இன்றேல் அவ்வாதித்தனின் உண்மை இயல்பு காணும் விஞ்ஞானிகளாகலாம்; அதுவுமின்றேல் நாட்டைப்புரக்கும்மன்னராகலாம்; நாட்டை நடத்தும் அமைச்சராகலாம்; நாட்டைக்காக்கும் வீரராகலாம்; ஒருகால் அஞ்ஞாயிற்றின் தோற்றத்தைக் கங்குற் பொழுதிலே கண்ணுக்கு மயக்கமில்லாது விளக்கமாய் வரைந்து காட்டும் ஓவியராகலாம். இவையெல்லாம்கூட அவ்வாதித்தன் ஓராது அச்சிருர் மீது காய்கின்ருனே! அவனது வன்கண்மை நன்மைபயக்குமோ? இன்றேல தீமை பயக்குமோ? அறிகிலேம்.

ஆற்றின் அருவியழகு. அவ்வருவி நீரில் ஆதித்தன் ஒளிபடுகிறது. என்ன அழகானகாட்சி! அவ்வருவியினிடையே சிலர் தலையை ஏந்துகிருர். அவரது தலைகளில் யாறு கொணரும் தாது மலர்களும் பிற இன்பப் பொருட்களும் படிந்து செல்கின்றன. அவர் அவ்வின்ப நீராடலில் மூழ்கியவராய்த் தம்மையும் மறந்துபாடுகிருர். அவ்வாறு பாடுங்கால் அவரின் குரல் நல்லோசை பெறுகிறது; இனிமை எய்துகிறது. அப்போழ்தினில் இயற்கையும் அவரும் ஒன்றுபடுகிருர்.

அவரையுங் கடந்த வெள்ளம் நுரையுடன் புற்களைப் புணர்ந்து கற்களைக் கடந்து நெடுகச் செல்கிறது. யாண்டுச்செல்கிறது? ஆழிச்செல்வனைக் கண்டு மகிழுதற்கு. அதுபோழ்து பரிதியஞ் செல்வன் தன்னொளியை அதன்மிசை செலுத்துகிருன். அவ்வமயம் அப்புனல் காலும் கவினைத் தேவரும் கண்டு மகிழ்கிருர்.

தொழிலாளன் தனது சிறு இல்லத்தை விட்டு வெளிப் போந்தான். அவனது அகன்ற தோள் மண்வெட்டி தாங்கியிருந்தது. தலை ‘சும்மாடு’ ஏந்தியிருந்தது. அவன்தன் காதல் செல்வம் - இல்லக்கிழத்தி - இன்பத் தேவியிடம் நல்லாசிபெற்று வேலைக்குச் செல்கிருன். அவனது அருமைத் தேவி ஆண்டவனைத் தொழுகிருள். எற்றுக்கு? அன்று தங் கொழுநன் நல் வேலைபெற்றுக் கூலியுடன் திரும்ப வேண்டும் என்பதற்கே. அவனது பிள்ளைகள் அவன்பின்போந்து‘அப்பா! அப்பா! எனக்கு மாம்பழம்’ என்று தம் நினை ஊட்டுகின்றன. அவன் தலையசைத்துப் புன்முறுவலோடு இசைகிருன். அவனது எளிய வாழ்வு-இன்ப வாழ்வு-அன்பு ததும்பும் வாழ்வு-இன்றையைக் காணவழி கோலும் வாழ்வு. அவ் வாழ்விலே எஞ்ஞான்றும்இன்பம்; எவ்வமயமும் மகிழ்வு. அவ்வாழ்வில் கவல்காண்டல் அரிது. பிறதுன்பங்கள் இருத்தல் இல்லை. அத்தகைய வாழ்வைக் கொண்ட தொழிலாளன் எத்துணை மனமகிழ்வுடன் செல்கிருன். அவன் வாழ்வு நல்வாழ்விற்கு இலக்கியம்.

பாதையில் சில பெண்கள் செல்கிருர்கள். அவர்களின் தலைகளில் விறகுச்சுமை. அச்சுமைகளைத் தங்களால் சுமக்க இயலாது அப்பெண் தெய்வங்கள் மிக அல்லலுறுகின்றன. ஏன் அவர்கட்கு இத்துணைத் துன்பம்? தங்கள் ஒருசாண் வயிற்றை நிரப்புதற்கு. அவர்கள் உடலயர்வால் திணறுகிருர்கள். அவர்கள் உடலில் நற்குருதியோட்டமில்லை. நற்குருதி ஓட்டமின்மையால் முகம் எழில்குன்றி அவர்கள் நடத்தற்குப் போதிய வலுவின்றிச் செல்கிருர்கள். நற்குருதி ஓட்டமின்மைக்குக் காரணம் என்னை? போதிய உணவின்மையே. நாட்டிடைத் தோன்றிய வறுமை என்னும் அலகை அவர்களைத் தொட்டுளது. அவ்வலகையை அவர்களினின்றும் அப்பாற்படுத்தல் வேண்டும்; அதற்குச் செல்வர்கள் முயலல் வேண்டும்; அவர்கள் ஏழையை ஆதரித்தல் வேண்டும்; வேண்டியன ஈந்து போற்றுதல் வேண்டும். அங்ஙனம் செல்வர்கள் ஏழையைப் போற்றின், அவ்வேழைகளது வறுமை ஒருவாறு நீங்கும். அவர் நல்லூன் பெறுவர்; நல்லெழில் பெறுவர்; நல்வாழ்வு கொள்வர்.

## காங்கிரசும் சத்தியமூர்த்தியும்

### மாறுபட்ட பேச்சு

(ஸ்ரீ. மயிலை இரத்னசபாபதி முதலியார்)

ஐரோப்பியர்களிடையிலும் ஆங்கிலோ இந்தியர்களுக்கிடையிலும் ஸ்ரீ சத்தியமூர்த்திக்குச் சொந்த ஹோதாவில் நண்பர் பலர் இருக்கலாம். ஆனுல், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித்தலைவராயிருந்து கொண்டு இந்திய தேசியத்திற்கு விரோதிகளாயிருப்பவர்களோடு அவர் நெருங்கி உறவாடுவதை நான் பலமாகக் கண்டிக்கிறேன். ஆனமலையில் ஐரோப்பியத் தோட்டக்காரர்களிடையில் ஸ்ரீசத்தியமூர்த்தி சமீபகாலத்தில் பேசியபொழுது இந்திய தேசிய காங்கிரஸின்கொள்கைக்கும், தீர்மானத்திற்கும் முற்றிலும் விரோதமாக பிரமிக்கத்தக்க சிலவார்த்தைகளைச் சொல்லியிருப்பதாகத் தெரிகிறது. தம்மைத் திருப்திசெய்துகொள்வதற்காகக் காங்கிரஸ் அபேதவாதத்திற்கு விரோதமானதென்று சொல்லி யிருக்கிருரென்று தோற்றுகிறது. அபேதவாதத்திற்கு விரோதமாகக் காங்கிரஸ் எந்த சமயத்தில், எந்த இடத்தில் தீர்மானம் செய்திருக்கிறதென்று நான் அவரைக்கேட்கின்றேன். காங்கிரஸ் மண்டபத்தில் லக்ஷ்மணபுரி தீர்மானங்களைப் பற்றி ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் பேசுகையில் அபேதவாதத்தின் மனோபாவத்தை ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றுசொன்னதை நான் இது சம்பந்தமாக ஞாபகமூட்டுகிறேன். சத்தியமூர்த்தி அபேதவாதத்திற்கு விரோதமாக முதலாளித்வ நோக்கத்தைக் கொண்டிருக்கலாம். ஆனுல் ஜனங்களுக்குத் தப்புவழிகாட்டுவதும் அபேதவாதத்தின் சார்பாகக் காங்கிரஸ் கொண்டுள்ள மனோபாவத்தைத் தப்பர்த்தம் செய்வதும் சரியாகா.

பண்டித ஜவஹர்லாலின் தலைமையில் லாகூரில் நடந்த காங்கிரஸ் பூரண சுதந்திரமே தனதுநோக்கமெனத்தீர்மானித்திருக்கும்பொழுது, ஸ்ரீ சத்தியமூர்த்தி ஆனமலையில் செய்த பிரசங்கத்தில் காங்கிரஸின் நோக்கம் குடியேற்றநாட்டந்தஸ்தென்று பொருள் படுமென்றும், பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறவே விட்டொழிப்பதென்ற அர்த்தமில்லை யென்றும் சொல்லியிருக்கிருர். லாகூர் காங்கிரஸுக்குமுன் காங்கிரஸின் நோக்கம் ‘சுயராஜ்யம்’ என்றே தீர்மானமாயிருக்கிறது. 1927-ம் வருஷத்தில் சென்னையில் நடந்த காங்கிரஸில், பண்டித ஜவஹரின் தூண்டுகோலின் பேரில் சுதந்திரமே காங்கிரஸின் நோக்கமென்று தீர்மானமாயிருக்கிறது. லாகூர் காங்கிரஸில் பூரண சுயராஜ்யமே நமது லக்ஷியமென முடிவாகத் தீர்மானிக்கபட்டது. பிரிட்டிஷ் சம்பந்தத்தை ஒழிப்பது காங்கிரஸின் தற்போதைய லட்சியமல்ல வென்று ஸ்ரீ சத்தியமூர்த்தி இன்னமும் சொல்லுவாரானுல், பிறகு ஏன் இரவுக்கிரவே காங்கிரஸின் கொள்கை லாகூர் காங்கிரஸ் மகா சபையில் மாற்றப்படவில்லை யென்று அவரைக் கேட்கின்றேன். லக்ஷ்மணபுரி காங்கிரஸ் தலைவரான பண்டித நேரு, பூரண சுயராஜ்யமே காங்கிரஸின் நோக்கமென விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் சரியாக எடுத்துச் சொன்னுர். ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு இந்தக்கொள்கை பிடிக்கவில்லையானுலும் சரி அல்லது அதில் நம்பிக்கை யில்லை யானுலும் சரி பிறகு அவருடைய ஜோலி காங்கிரசுக்கு வெளியே. காங்கிரஸின் லட்சியத்திற்கு அவர் தம்முடைய சொந்த வியாக்கியானத்தைச் செய்யக்கூடாது. அதுவும் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக அவர் இருக்குமளவும் காங்கிரஸின் கொள்கையைத் தப்பாக வியாக்கியானம் பண்ணக் கூடாது.

காங்கிரஸ் புதிய அரசியலை நிராகரித்துத் தீர்மானம் செய்திருக்கிறது. நிராகரிப்புத் தீர்மானத்தை எவ்விதம் அமுல்செலுத்துவதென்றவிஷயத்தைக் காங்கிரஸ் ஆலோசிக்கையில் சட்டசபைகளை நாம் கைப்பற்ற வேண்டுமென்று அதுதீர்மானித்து பதவியேற்கும் பிரச்னையை அகில இந்திய காங்கிரஸ்கமிட்டியின் ஆலோசனைக்கு விட்டுவிட்டது. ஆனுல்அரசியலை வேலை செய்வதற்கோ தகர்ப்பதற்கோ காங்கிரஸ்காரர்கள் பதவிகளை ஏற்றுக்கொள்ள மாட்டார்களென்றும், ஆனுல் இந்த ஸ்தாபனங்களிலிருந்து ஜனங்களுக்காக எத்துணை நன்மையைப் பெறமுடியுமோ அத்துணை நன்மையைப்பெற அவர்கள் உத்தியோகங்களேற்றுக் கொள்வார்களென்றும், சத்தியமூர்த்தி பேசியிருப்பதாகச் செய்தி வெளியிடப்பட்டிருக்கிறது. அப்படியானுல் ஸ்ரீ சத்தியமூர்த்தியினுடைய மனப்பான்மைக்கும் மிதவாதிகளின் மனப்பான்மைக்கும் ஏதாகிலும் வித்தியாச முண்டா வென்று நான் கேட்கிறேன். இந்தியா கவர்ன்மெண்டு சட்டத்தைக் கண்டிப்பதில் கனம் வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி ஸ்ரீசத்தியமூர்த்திக்கு ஒருவிதத்திலும் இளைத்தவரல்ல. இந்தியா கவர்ன்மெண்டு சட்டத்தின் பேரில் ஸ்ரீ சத்தியமூர்திக்குள்ள மனப்பான்மை லக்ஷ்மணபுரி தீர்மானத்திற்கு நேர்விரோதமானது. தீர்மானத்திற்கு அவர்வியாக்கியானம் செய்திருப்பது சரியென்ருல் நம்முடைய கட்சியில் மிதவாதிகளையும் சேர்த்துக் கொள்ளுவோமே! பிற்போக்கான மனப்பான்மையை வைத்துக் கொண்டு காங்கிரஸுக்குத் தலைமை வகித்து நடத்துவது பொருத்தமில்லாத சங்கதி. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி இனிமேலாகிலும் அவர் தமது இஷ்டம்போல் நடக்காமல் தடுத்து மாகாணத்தின் நல்லபெயரை நிலைநிறுத்துமென்று நம்புகிறேன். (சு-மி)



லும். ஆதலின் பள்ளிக்கூடத்தலைவராய் இருப்போர் மாணவர்களுக்குப் பயன் தருவனவற்றை நன்கு ஆராய்ந்து ஆசிரியர் நிலைகளையும் உணர்ந்து அவர்களுள் தாமும் ஒருவராக எண்ணி நடப்பின் மாணவர்களுக்குப் பெருநன்மை உண்டாகும். பின்னும் பள்ளிக்கூட அதிகாரிகளும் தலைமை ஆசிரியர்களைத் தங்கள் எண்ணத்தை நடத்தி வைக்கும் ஆட்களே எனக் கருதுதல் பெருந்தவறென்பதைக் கூறல் வேண்டுமோ?

ஆதலின் பள்ளிக்கூட ஆசிரியர்களைத் தலைமை ஆசிரியர்கள் அனுசரித்தும் தலைமை ஆசிரியர்களைப் பள்ளிக்கூட அதிகாரிகள் அனுசரித்தும் நடப்பார்களாயின் மாணவ உலகத்திற்குப் பெருநன்மை உண்டாகும்.

## சாதன சதுட்டயம்

முத்திமார்க்கத்திற்குரிய அருமையான போதனைகள்

மஹாபாரதத்தில் கூறியிருக்கும் பீஷ்மாசாரியாருடைய பெரிய தகப்பனர் **தேவாபி** எனும் சீவன் முத்தர், இப்போது இமயமலேயில் **மாஸ்டர் குதூமி** என்ற பெயருடன் வீற்றிருக்கின்றார். இம்மகரிஷி **ஸ்ரீமான் ஜி. கிருஷ்ணமூர்த்தி** அவர்களுக்குச் சிறு வயதில் கனிமொழிகளாகக் கொடுத்த உபதேச போதனைகளுக்கு **ஸ்ரீமான் லேட்பீடர்** அவர்களும் **டாக்டர் அன்னிபெசன்ட்** அம்மையாரும் செய்த வியாக்கியான உரைகள், ஆங்கிலத்தினின்று சாதாரண தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டு "சாதன சதுட்டயம்" என்ற பெயருடன் வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன.

இந்நூல் இல்லற வாழ்க்கையிலிருந்து கொண்டே நான்கு சாதனங்களேக் கையாள வேண்டிய முறையைக் காட்டுவதோடு தன்னேத் தான் அறியக்கூடிய விசார சாகரமாயுமிருக்கின்றது.

கிரௌன் பக்கம் 520 ; 29 அத்தியாயம் ; உயர்ந்த காகிதம். விலே ரூபா 3.

## திவ்ய ஞான தீபம்

இது, பாழ்வெறி - விகாசமுறை - தேகங்கள் - புனர் ஜன்மநியதி - கர்மநியதி - மரணத்திற்குப்பின் - மார்க்கம் - தியானம் - ஞானசாதனம் - சீவன் முத்தர்கள் - குருநாதனேக் காணும் வழி - சிஷ்யத்வப்படிகள் - ஞானபூமிகள் - முத்தர் நிலேகள் - மாட்சி முதலிய பொருள்கள்பற்றி எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட நூல். 330 - பக்கங்கள் கொண்டது. நல்ல பெதர்வெயிட் காகிதத்தில் அச்சிடப்பட்டது. விலே ரூபா 3.

முருகவேள் புத்தகசாலே,
இராயப்பேட்டை, சென்னே.

## திருவிளேயாடற் புராணம்

### மூலமும் விசேட உரையும்

சஞ்சிகை சஞ்சிகையாக வெளிவருகின்றன

தமிழ் நூல்களிற் சிறந்தன சில. அவைகளுள் ஒன்று, பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளேயாடற் புராணம். இப்புராணம் சோமசுந்தரக் கடவுள் புரிந்த திருவிளேயாடல் அறுபத்து நான்கையும் நன்கு விளக்குவது.

நூலாசிரியராகிய பரஞ்சோதி முனிவர் பல கலேயில் வல்லவர் ; பாவலர்; அன்பர். அம்முனிவர், திருத்தக்க தேவர் கல்வியிலும், சேக்கிழார் அன்பிலும், கம்பர் கவியிலும் முறையே படிந்து மூழ்கித் திளேத்தவர் என்பது, அவர்தம் திருவாக்குடன் உறவுகொண்டு ஒன்றுபட்டு நிற்கும் நுண் புலவோர்க்கு இனிது புலனுகும். முனிவர் மொழியில் தமிழ் மணமும் சிவ மணமும் கமழ்ந்துகொண்டிருத்தல் வெள்ளிடைமலே.

இத்துணேச் சிறப்பு வாய்ந்த புராணத்துக்குச் சென்னேக் கிறிஸ்துவக் கல்லூரியில் நீண்டகாலம் தமிழாசிரியரா யிருந்தவரும், பேர்பெற்ற உரையாசிரியருமாகிய திருவாளர் - ஈக்காடு - இரத்தினவேல் முதலியார் அவர்கள் பொழிப்புரையும் விசேடமும் எழுதியுள்ளார்கள். அவ்வுரை எவர்க்கும் பயன்படுமுறையில் வரையப்பட்டிருத்தலால், அதைப்பெற்றின்புறத் தற்காலத் தமிழுலகம் விழைந்த வண்ணமா யிருக்கிறது.

திருவாளர் முதலியார் உரை வெளிவந்து பல ஆண்டுகளாயின. அச்சிரிய உரை தற்காலத் தமிழுலகிற்குப் பயன்படும்படி, அதை வெளியிடும் உரிமையை, உடையவரிடமிருந்து யான் பெற்றுள்ளேன். (இதுபற்றிய விவரம் பதிப்புரையில் விளக்கப்படும்.)

பரஞ்சோதி முனிவர் அருளிய மூலமும், இரத்தினவேல் முதலியார் உரையும் கொண்ட பதிப்பு, டெம்மி 8 பக்கமுடைய ஆறு பாரங் கொண்ட சஞ்சிகை சஞ்சிகையாக 1935-ம் ஆண்டு ஜுலே மாதம் முதல் வாரத்திலிருந்து வெளிவந்துகொண்டிருக்கிறது.

அன்பர்கள் உடனே சந்தாதாரர்களாகச் சேர்வார்களாக.

சந்தா விவரம் :

| | ரூ. | அ. |
|---|---|---|
| மாதச் சஞ்சிகை (சென்னேக்கு மட்டும்) .... .... | 0 | 4 |
| புத்தக முழுவதற்கும் - முன்பணம் - சென்னேக்கு .... .... | 5 | 0 |
| ,, ,, ,, வெளியூர்க்குத் தபாற்செலவுடன்.... | 6 | 8 |
| புத்தகம் முற்றுப்பெற்றபின் .... .... ... | 8 | 0 |

சுமார் 25 சஞ்சிகையில் புத்தகம் முற்றுப் பெறலாம்.

7 சந்தாதாரர்களேச் சேர்த்தனுப்புவோர்க்கு ஒரு சஞ்சிகை அதிகமாக அனுப்பப்படும்.

திரு. வி. உலகநாத முதலியார்,
முருகவேள் புத்தகசாலே,
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னே.

## அரிய தமிழ் நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| கந்தபுராணச் சுருக்கம் (மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்) | 3 | 0 |
| முருகவேள் பனுவல் திரட்டு .... .... .... | 1 | 0 |
| திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் முதல் திருமுறை (அரும் பத வுரையும் சாத்திரக் குறிப்பும்) .... .... | 0 | 12 |
| முருகன் திருவருட்பா .... .... .... | 0 | 8 |
| தேவி தோத்திர மஞ்சரி .... .... .... | 0 | 4 |
| குசேலோபாக்கியாநம் (மூலமும் அருப்பத உரையும்) .... | 1 | 4 |
| விநாயகர் பனுவல் திரட்டு .... .... .... | 0 | 6 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறைத் திரட்டும், அரும்பத உரையும் கிளேஸ் .... .... .... .... | 0 | 5 |
| ஷை ரப் .... .... .... .... | 0 | 3 |
| சிவபுண்ணியத் தெளிவு .... .... .... | 0 | 3 |
| சிவாலய பூஜை விளக்கம் .... .... .... | 0 | 1 |
| சமயத்தொகுதி ... ... .... .... | 0 | 2 |
| தாயுமான சுவாமிகள் பாடல் .... .... .... | 0 | 4½ |

## கந்தர் அநுபூதி

சென்னே, இராயப்பேட்டை வேதப்ரவசன பந்திரத்து
சிவத்தியானனந்த மஹரிஷி யவர்கள் எழுதிய
கூடார்த்த தீபிகை

என்னும் புத்துரையோடு கூடியது. இதுவரை இவ்வகைத் தெளிவான அநுபூதிஉரை வெளிவரவில்லேயென்று படித்தோர்பலரும் கொண்டாடிக் கூறியுள்ளார். விலே ரூபா 1.

### சைவ சித்தாந்த மகா சமாஜப் பதிப்புகள்

| | | |
|---|---|---|
| அப்பர் தேவாரம்—அரும்பொருளகராதியுடன் ... ... | 1 | 0 |
| சுந்தரர் தேவாரம்—குறிப்புரையுடன் ... ... | 0 | 12 |
| திருவாசகம் ... ... ... ... | 0 | 2½ |
| திருவாசகம் (மூலமும் உரையும்) ... ... ... | 3 | 0 |
| திருமூலர் திருமந்திரம் ... ... .... | 1 | 0 |
| பதினேராந் திருமுறை ... ... ... | 0 | 11 |
| சித்தாந்த சாத்திரம் பதினன்கு (மூலமும் உரையும்) ... | 3 | 0 |
| சிவஞானசித்தியார் (மூலமும் உரையும்) .... .... | 0 | 12 |
| மெய்கண்டாரும் சிவஞான போதமும் .... .... | 1 | 0 |
| திருப்புகழ் (அருணகிரியார் அருளிய நூல்கள் முற்றுமடங்கியது) | 3 | 0 |
| சங்கநூற் புலவர்கள் பெயர் அகராதி .... .... | 0 | 2½ |

முருகவேள் புத்தகசாலே,
12, கணபதிமுதலி தெரு, இராயப்பேட்டை, சென்னே.

Printed at the Sadhu Press: Published by T. V. Kalyanasundaran (Editor) 12, Ganapathi Mudali Street, Royapettah, Madras.

